For private circulation only

Book Post

https://christianhistoricalsociety.in/

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

செப்டம்பர் 2023 திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் விலை : ரூ 60 இதழ் 40



மிஷனெரி பணி செய்யாத
எந்தச் சபையும்
நெடுநாள் வாழ்கிறதில்லை

மகாகனம் மார்லி அத்தியட்சர்



## ஆசிரியர் சுவடு

**ஆண்டவரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தில் வாழ்த்துக்கள்.**

இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியின் ஒளியை தமிழ் மக்கள் மத்தியில் பிரகாசிக்க வைப்பதே தங்களின் முக்கிய குறிக்கோள் என்றும், இந்த நோக்கத்தை நிறைவேற்ற கடவுளின் கருணையை முழுமையாக சார்ந்து இருந்த பல அருட்பணி இயக்கங்களும், அருட்பணியாளர்களும் தமிழகத்தில் எற்படுத்திய தாக்கத்தினையும், அவர்கள் செய்த பணிகளையும், இன்றைய திருச்சபை மக்களுக்கு நம்முடைய வரலாற்றுச் சுவடுகள் மாத ஆய்விதழ் மறைக்கப்பட்ட, மறந்த திருச்சபை வரலாறுகளை தொடர்ந்து கொண்டு வந்து கொண்டிருக்கின்றது.

இம்மாதம் நற்செய்தி பணியின் சிறப்பு மாதமாகும். வாசகர்கள், ஆசிரியர்கள், இதுவரையிலும் நம்முடைய மாத இதழில் வெளியிடப்படாத ஆய்வுகளை எழுதவும், வாசகர்கள் இன்னும் கேள்விப்படாத வரலாற்றுச் உண்மைகளை கொண்டு செல்லும் நோக்கில் ஜெபத்துடனும், தரிசனத்துடனும் எழுத அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

எனவே உறுப்பினர்கள், வாசகர்கள் இம்மாத ஆய்விதழை நண்பர்கள், உறவினர்களுக்கு அறிமுகப்படுத்த அன்போடு கூட கேட்டுக்கொள்ளுகின்றேன். ஒவ்வொரு மாதமும் இவ்விதழை பிரிண்ட் செய்து வெளியிடுவதற்கு மிகுந்த பொருட்செலவுகள் உண்டு, மாத சந்தாவை புதுப்பித்து கொள்ளும்படி அன்புடன் நினைவுபடுத்துகிறேன். முடியுமானால் காணிக்கையாகவோ அல்லது நன்கொடையாகவோ கொடுத்து தாங்க அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

பராபரனின் பணியில்
*Manna Selvakumar*

G Pay

**சுஜித் ரெக்ஸ்**
வடிவமைப்பு

**மன்னா செல்வகுமார்**
ஆசிரியர்


**ஆசிரியர்**

**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
**கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,**
**பங்களாச் சுரண்டை-627859,**
**தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)**
**04633 290401, 91767 80001**

christianhistoricalsociety.in
tchsportal.co.in
+91 91767 80001



# சீயோன் ஆலயம், தரங்கம்பாடி

அருள்திரு. T. இர்வின் ஞானமுத்து,
தஞ்சாவூர்

தரங்கம்பாடியில் முதல் கிறிஸ்தவ தேவாலயம் 16 நூற்றாண்டின் மத்தியில் நாகப்பட்டினத்தை தலைமையிடமாகக் கொண்ட இயேசு சபை மறைப்பணித்தளத்திற்கு சொந்தமானதாக கருதப்படுகிறது.

டேன்ஸ்போர்க் என்கிற டேனிஷ் தரங்கை கோட்டை கிழக்குப் பகுதியில், சிறிய தேவாலயம் அமைக்கப்பட்டது. 1671 ல் சீயோன் ஆலயம் தற்போதுள்ள இடத்தில் அமைக்கப்பட்டது. காணிக்கை பையின் கைப்பிடியில் 1687 என்றும், திருவிருந்துக்கு பயன்படும் பாத்திரத்தில் 1689 என்றும் ஆண்டுகள் பொறிக்கப்பட்டுள்ளது. 1701 ஆம் ஆண்டு தற்போதுள்ள அமைப்பில் ஆலயம் கட்டப்பட்டுள்ளது. இந்த ஆலயத்தில் ராணுவ குருக்கள் டேனிஷ் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டனர். 1784ம் ஆண்டு பெரிய அளவில் சீரமைப்பு வேலை இந்த ஆலயத்தில் மேற்கொள்ளப்பட்டது. எருசலேம் ஆலயம் கட்டப்படும் வரை இந்த ஆலயத்திலேயே டேனிஷ் ஹாலே மிஷனரி பணியாளர்கள் ஆராதனை நடத்தினர்.

**இந்தியாவின் முதல் டேனிஷ் அப்போஸ்தலன் - ஜேக்கப் வேர்ம்ஸ்**

மேஜிஸ்டர்ஸ் ஜேக்கப் வேர்ம் (Magister Jacob Worm) தவறுகளை சுட்டி காட்டினார் என்பதற்காக அரசுக்கும், திருச்சபைக்கும் எதிராக பேசினார் என குற்றம் சாட்டப்பட்ட நிலையில் நாடு கடத்தப்பட்டு தரங்கைக்கு சீயோன் ஆலயத்தில் ராணுவ குருவாக 1681ல் அனுப்பப்பட்டார். இவர் தான் சீகன்பால்க்

புளுச்சோக்கு முன்பாகவே இறைபணிக்கு வித்திட்டவர். தெருவில் இறங்கி இந்தியர்களுக்கு நற்செய்தியை அறிவித்தார். சிலர் ஏற்றுக்கொண்டனர். புதிய ஏற்பாட்டையும் மொழிபெயர்த்தார். ஆனால் இவர் பணி அவரோடு முடிந்து போனது. 17. 12. 1691ல் மரித்தப்போது உண்மையை நேசித்தவர், ஞானவான்களின் எதிரி, தன் நாட்டின் தீர்க்கதரிசி, இந்தியாவின் டேனிஷ் அப்போஸ்தலன் என அரசாங்க பதிவேட்டில் குறிப்பிடப்பட்டார்.

**வானவியல் அரங்கம்**

1787ஆம் ஆண்டு ஆலய கோபுரத்தின் சிறு பகுதி அகற்றப்பட்டு சிறிய விண்வெளி ஆய்வு மையம் அமைக்கப்பட்டது. 1784 ஆம் ஆண்டு ஹெனிங் மன்ச் ஹேங்கள் ஹாட் Henning Munch Engelhardt ராணுவ குருவாக வானவியல் கருவிகளுடன் தரங்கை வந்து இறங்கினார். இரண்டடி வானவியல் வட்ட அமைப்பும், மூன்றடி வானவியல் தொலைநோக்கி, வானவியல் கடிகாரம், ரெட்டை தொலைநோக்கிகள் இரண்டடி உயரத்திலும், எட்டடி உயரமுள்ள டாலேண்ட் (Dolland) தொலைநோக்கியும் சீயோன் ஆலயத்தின் மேற்கோபுரத்தில் அமைக்கப்பட்டது. 1788, 1789 ஆண்டுகளில் தரங்கம்பாடி அமைந்துள்ள அட்ச ரேகை, தீர்க்க ரேகை கணக்கிட்டார். கிரீன்விச் நேர அளவையும் குறிப்பிட்டுள்ளார். The Tranquebar Association for knowledge on India என்ற அமைப்பை ஏற்படுத்தி தாவரவியல் பூங்கா அமைத்தார். தரங்கை சுற்றியுள்ள அனேக பாம்பு வகைகள் கணக்கெடுக்கப்பட்டன. 1791ல் பிரெட்ரிக் தீவு என அழைக்கப்பட்ட நிக்கபார் தீவுகளுக்கு சர்வே பண்ண அனுப்பப்பட்டார். காய்ச்சலால் பாதிக்கப்பட்டு இறந்து தெரசா தீவில் அடக்கம் பண்ணப்பட்டார்.

சீகன்பால்க், புளுச்சோ வந்த போது, சீயோன் ஆலய குருவாக ஜேக்கப் கிளமேன்டைன் (Jacob Clementin) 1706ல் இருந்து 1730ல் அவர் மரிக்கும் வரை பணியாற்றினார். வாரத்திற்கு இருமுறை சீகன்பால்க் இவ்வாலயத்தில் அருளுரையாற்றினார். சீகன்பால்க் தமிழிலும் புளுச்சோ போர்ச்சுகிசிலும் அருளுரை இவ்வாலயத்தில் ஆற்றினர்.

சீர்திருத்த திருச்சபையின் முதல் கனியாக 12ஆம் தேதி மே மாதம் 1707ல் போர்ச்சுகிஷ் பேசும் அடிமைகளுக்கு சீயோன் ஆலயத்தில் திருமுழுக்கு கொடுக்கப்பட்டது. தொடர்ந்து ஆரம்ப கால சீர்திருத்த திருச்சபை விசுவாசிகள் இந்த சீயோன் ஆலயத்தில் திருமுழுக்கு பெற்றனர்.

தரங்கை சீர்திருத்த மிஷனரிமார்கள் முதலில் கால் பதித்த இடம் மட்டுமல்லாமல், மெத்தடிஸ்ட் அருட்பணியாளர் **ஜேம்ஸ் லின்ச்** 1816ல் நாகையில் இறங்கி தரங்கைக்கு வந்து அருட்பணியாளர்கள் கல்லறைக்கு நினைவஞ்சலி செலுத்தினார். அருட்பணியின் ஆரம்பம் தரங்கை என்பது அருட்பணி இயக்கங்களுக்கு அடித்தளமாகும். 57 டேனிஷ் மற்றும் ஜெர்மன் மிஷனரிகள் 1706 லிருந்து 1846 வரை இந்த ஆலயத்தில் பணியாற்றியுள்ளனர். 20 பேர் அங்கேயே அடக்கம் செய்யப்பட்டனர் 22 பேர் தென்னிந்திய பகுதியில் உள்ள பணித்தளங்களில் அடக்கம் செய்யப்பட்டுள்ளனர். 15 பேர் மட்டுமே மீண்டும் தாயகம் திரும்பினர். இரண்டு டேனிஷ் ஆளுநர்கள் இந்த ஆலயத்தில் அடக்கம் செய்யப்பட்டுள்ளனர். 1717ஆம் நூற்றாண்டு ஐரோப்பிய மரவேலைப்பாடு நிபுணத்துடன் செதுக்கப்பட்ட இயேசுவின் கடைசி இரவு உணவு காட்சியை சித்தரிக்கும் மர ஓவியம் வெஸ்டிரியில் காணப்பட்டது. தற்போது தென்னிந்திய திருச்சபை சொத்தாக விளங்குகிறது.

**ஆங்கிலேயே திருச்சபையிடம் ஒப்படைப்பு**

1845இல் அனைத்து டேனிஷ் சொத்துக்களும் கிழக்கிந்திய கம்பெனியிடம் விற்கப்பட்டன. அன்றிலிருந்து எஸ்பிஜி சங்கத்துக்கு கீழ் கொண்டுவரப்பட்டது. சீயோன் ஆலயம், அதன் பர்னிச்சர் இரண்டு கல்லறைத் தோட்டங்கள், 6000 ரூபாய் சென்னை தூய ஜார்ஜ் கோட்டை ஆலயத்தின் கீழ் வந்தது. மாதம் 21 ரூபாய் ஆங்கிலேய குருவுக்கு கொடுக்கப்பட்டது.

முதல் ஆங்கிலேயே குருவாக அருள்திரு பி. எஸ். கிளர்க் (Rev. B. S. Clarke) திருச்சி இணைச் சாப்ளின் ஆக இருந்தவர். தரங்கையில் பணியமர்த்தப்பட்டார். இவர் தரங்கையில் தங்கி





நாகை, தஞ்சை கும்பகோணம், திண்டுக்கல், மதுரை ஆகிய பகுதிகளை அவ்வப்போது பார்வையிட்டார். 1846இல் பேராயர் ஸ்பென்சரால் சீயோன் ஆலயத்திற்கு ஆங்கிலேயே திருச்சபை என்ற முழு அங்கீகாரம் கொடுக்கப்பட்டது. 1846 ல் 1741, 1759, 1791 என்ற ஆண்டு பெயரிடப்பட்ட கோபுர மணிகள், தொன்மையான டென்னிஸ் கடிகாரம் ஆங்கில அரசிடம் ஒப்படைக்கப்பட்டது. பி. எஸ். கிளார்க், ஹெச் டெய்லர், ஆர். பி. லிட்டில் இந்த ஆலயத்தில் பணியாற்றினர். 1853ல் கட்டிட பராமரிப்பு பணி ஹெச் டெய்லர் மூலம் சிறப்பாக நடைபெற்றது. 1879ல் கட்டிட பராமரிப்பு நடைபெற்றது.

**தென்னிந்திய திருச்சபை உருவாக்கம் திருச்சபையின்**

தென்னிந்திய திருச்சபை உருவாக ஒருமித்த கருத்து முடிவாகும் வரை தரங்கை விட்டுச் செல்லக்கூடாது என்று பேராயர் வி. எஸ். அசரியா அவர்களின் முடிவாக இருந்தது. ஆங்கிலிக்கன், பிரஸ்பிட்டேரியன், வெஸ்லியன் மெத்தடிஸ்ட், பப்டிஸ்ட், எல் எம் எஸ், சி எம் எஸ், அமெரிக்கன் மெத்தடிஸ்ட், கான்க்ரிகோனிஸ்ட் போன்ற பல்வேறு அருட்பணி இயக்கத்தை சார்ந்த அனைவரும் கூடி தென்னிந்திய திருச்சபையின் உருவாக்கத்தின் அடித்தளமான தரங்கை அறிக்கையை இந்த சீயோன் ஆலயத்தில் வைத்து நிறைவேற்றப்பட்டது.

**சீயோன் ஆலயத்தின் 300வது ஆண்டுவிழா**

2001 ஆம் ஆண்டு சீயோன் ஆலயத்தின் 300வது ஆண்டு விழாவும், அருட்பணியர் இல்லமும், திருமண்டல அருட்பணி விழாவும் மிகப் பிரம்மாண்டமாக பேராயர் பேரருள்திரு. ஜேம்ஸ் சீனிவாசன், திருமண்டல பொருளாளர் அருள்திரு. சுரேஷ்குமார் அவர்களின் பெரிதான முயற்சியால் ஆலயம் புனரமைக்கப்பட்டு தென்னிந்திய திருச்சபையின் முதன்மை பேராயர் சுகந்தர் அவர்கள் தலைமையில் வெகு விமர்சையாக கொண்டாடப்பட்டது. பல வரலாற்று நினைவுச் சின்னங்கள் அமைக்கப்பட்டன.

**பேரிடர் மீட்பு பணி**

2004 ஆம் ஆண்டு சுனாமியால் திருச்சி-தஞ்சை திருமண்டலத்தின் 250 கிலோ மீட்டர் அளவுள்ள கடற்கரைப் பகுதி பாதிக்கப்பட்டது. அந்த நேரத்தில் தரங்கை, நாகை ஆகிய இடங்களை மையமாகக் கொண்டு அடுத்த நாட்களே பால், உணவு பொட்டலங்கள், உடைகள் என துரித கால பணியும், தொடர்ந்து வாழ்வை மீட்டெடுக்க வீடு கட்டவும், வலை, படகு போன்றவை வாங்கவும், சமையல் பாத்திரங்கள் போன்றவைகளும் கொடுக்கப்பட்டு சுனாமி நிவாரண பணிகள் சிறப்பாக நடத்தப்பட்டது. 2008 நிஷா, 2011 தானே, 2018 கஜா ஆகிய புயல்கள் தாக்கி அதிக சேதம் ஏற்பட்டபோது திருமண்டலம் மிகச் சிறப்பாக நிவாரண பணிகளை மேற்கொண்டது.

**தென்னிந்திய திருச்சபையின் பவள விழாவின் மாபெரும் அருட்பணி விழா**

தென்னிந்திய திருச்சபை உருவாக வித்திட்ட தரங்கையில் தென்னிந்திய திருச்சபை பவள விழாவை முன்னிட்டு தென்னிந்திய திருச்சபையின் மாபெரும் அருட்பணி விழா ஜூன் மாதம் 14, 15 தென்னிந்திய திருச்சபை சார்ந்த 24 ன் திருமண்டலங்களிலிருந்து 1800 பேர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். தென்னிந்திய திருச்சபையின் பிரதம பேராயர், துணை பிரதம பேராயர், சினாடு செயலாளர் மற்றும் தென்னிந்திய திருச்சபையின் அனைத்து பேராயர்கள், பேராயர் அம்மாக்கள், தென்னிந்திய திருச்சபை நற்செய்தி அருட்பணி இயக்கத்தின் இயக்குநர். தென்னிந்திய திருச்சபை அனைத்து துறை இயக்குநர்கள், ஆயர்கள், பெண் ஊழியர்கள், மிஷனரிகள் என அனைத்து தரப்பினரும் பங்கு பெற்று சிறப்பித்தனர். அனைத்து ஏற்பாடுகளையும் தென்னிந்திய திருச்சபை நற்செய்தி அருட்பணி இயக்கத்தின் தலைவராக இருக்கும் பேராயர் பேரருள்திரு சந்திரசேகரன் அவர்கள் தலைமையில் திருமண்டல அலுவலர்கள், திருமண்டல நற்செய்தி பணி இயக்குநர்கள், மறை மாவட்ட தலைவர்கள் மிகச் சிறப்பாக ஒழுங்கு செய்து இருந்தனர். கடற்கரையில் கோட்டையின் முன் பகுதியில் மிகப்பெரிய அளவில் மாநாடு அரங்கம் அமைக்கப்பட்டு மிகப் பிரமாண்டமாக நடந்தேறியது.

தென்னிந்திய திருச்சபை உருவாக வித்திட்ட தரங்கை சீயோன் ஆலய வளாகத்தில் தென்னிந்திய திருச்சபையின் பவள விழா நினைவுச்சின்னம் பிரதம பேராயரால் திறந்து வைக்கப்பட்டது.

# அருட்திரு. கிறிஸ்டியன் போலே



**Rev. Dr. prof. டேனியல் ஜெயராஜ்**
(Oxford Centre for Religion and public life)
**கா. ஸ்டான்லி**
கல்பாக்கம் / போலையர்புரம்

எத்தனை தீர்க்கர், அநேக அப்போஸ்தலர்கள்
எத்தனை போதகர்கள், இரத்த சாட்சிகள்
எத்தனை வேண்டுமோ, அத்தனையும் தந்திங்கு
இத்தனையாய்க் கிருபை வைத்த நம் கர்த்தனைப்
பாடித் துதி மனமே; பரனைக் கொண்டாடித் துதி தினமே

வே. சாஸ்திரியார்

**'திரை கடலோடி திரவியம் தேடு'** என்பது நம் முன்னோர்கள் நமக்கு கற்றுத் தந்தபாடம். **'திரை கடலோடி திருமறை போதி'** என்பது நமது கர்த்தராகிய இயேசுகிறிஸ்து நமக்கு கொடுத்த கட்டளை. அக்கட்டளைக்குக் கீழ்ப்படிந்து, ஜெர்மனியிலிருந்து தமிழகம் வந்த மிஷெனரி ஒருவரைக் குறித்து அறியப்போகிறோம். இவர் தமிழ்நாட்டில் ஊழியம் செய்த 41 ஆண்டுகளில் ஒருமுறை கூட தன் சொந்த நாட்டிற்குத் திரும்பிச் செல்லாதவர். அவர்தான் அருட்திரு கிறிஸ்டியன் போலே ஆவார்.

ஜெர்மனி நாட்டில் பிறந்த ஒருவரின் பெயரை, அவரின் சொந்த ஊரில் இருந்து 9000 km அப்பால் (சாலைமார்க்கமாக) தமிழ்நாட்டில் உள்ள கிராமத்துக்கு 19 ஆம் நூற்றாண்டில் பெயராக வைப்பதை கற்பனை செய்துபார்க்க முடிகிறதா? (II கொரி2: 9). ஆனால் 1821-ம் ஆண்டு தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள முதலூருக்கு அருகில் உள்ள கிராமத்துக்கு **'போலே-ஐயர்-புரம்'** (போலையர்புரம்) என்று பெயர் வைத்தனர்.

அப்பெயர் திருச்சியிலே 40 ஆண்டுகள் மிஷெனெரியாக பணியாற்றிய அருட்திரு கிறிஸ்டியன் போலே ஐயரை நினைவு கூறத்தக்கதாக வைத்த பெயராகும்.

### ஜெர்மனியில் கிறிஸ்டியன் போலேவின் வாழ்க்கை:

கிறிஸ்டியன் போலே பாப்பேன் (Babben) என்ற சிறிய கிராமத்தில் 09.03.1744 அன்று பிறந்தார். பாப்பேன், ஜெர்மனியின் வடகிழக்கு பகுதியில் உள்ள பிராண்டன்பர்க் (Brandenburg) மகாணத்திலுள்ள ட்ரேனா (Drehna) மாவட்டத்தின் சிறிய கிராமமாகும். கிறிஸ்டியன் போலேயின் பெற்றோர் திரு மார்ட்டின் போலே மற்றும் திருமதி கேத்தரின் ஆவர். ஆடு மேய்க்கும் தொழில் செய்த இவர்களுக்கு 9 குழந்தைகள் பிறந்தனர். இதில் முதலாவது, மூன்றாவது, நான்காவது மகன்கள் மிகச் சிறிய வயதிலேயே மரித்தனர். கிறிஸ்டியன் இரண்டாவது மகன் ஆவார். முதலாவது மகனின் இழப்பு மார்ட்டின் அவர்களை இரட்சிப்புக்கு நேராக வழிநடத்தியதோடு, அவரை ஒரு உண்மைக் கிறிஸ்தவராகவும், கிறிஸ்தவ கோட்பாடுகளை கவனமாக பின்பற்றுபவராகவும் மாற்றியது. திரு மார்டின் தம்பதியினர், தன்னுடைய குழந்தைகளான கிறிஸ்டியன் போலே, அவருடைய சகோதரர் மற்றும் நான்கு சகோதரிகளை ஒழுக்கமிக்க கிறிஸ்தவர்களாக்க,



வேத அறிவை புகட்டி மிகவும் கண்டிப்புடன் வளர்த்தனர். கிறிஸ்டியன் போலே தன்னுடைய பெற்றோரின் தொழிலான ஆடுமேய்க்கும் தொழிலை செய்து வந்ததோடு, தனித்து இயங்கிய ஆசிரியர்களிடமும் (Private tutors), ட்ரோனாவிலுள்ள கிராமப் பள்ளியிலும் கல்வி கற்று வந்தார். அவருடைய இளவயதில் மிகவும் பிடித்தமான வசனம் கத்தோலிக்க திருமறையிலுள்ள, சீராக் 7 : 29 - 30 வசனங்களாகும். கிறிஸ்டியன் போலேயின் பள்ளி ஆசிரியர் பர்க்ஹார்ட் (Burckhardt) அவருக்கு எழுதவும், கணக்குப் பாடத்தையும் கற்றுக் கொடுத்ததோடு கிறிஸ்துவை விசுவாசித்தல் மற்றும் இரட்சிப்பின் முக்கியத்துவங்களைக் குறித்தும் கற்றுக் கொடுத்தார். கிறிஸ்டியன் போலேக்கு கல்வியின் மீது பேரார்வம் இருந்தாலும், சூழ்நிலைகளின் காரணமாக அவரால் கல்வியைத் தொடர முடியவில்லை. இதனால் 17-லிருந்து 19-வது வயது வரை ஒரு உள்ளூர் இராணுவ அதிகாரியிடம் பணிபுரிந்தார். கர்த்தருடைய கிருபையினால், மறுபடியும் 1763 ஆம் ஆண்டு ட்ரேனாவிலுள்ள பள்ளியில் இணைந்து கல்வியைத் தொடர்ந்தார். இம்முறை போதகர் மற்றும் ஆசிரியரான காட்பிரைட் லிப்பக் (Gottfried Lippack) கிறிஸ்டியன் போலேக்கு கற்றுக் கொடுத்தார். போதகர் லிப்பக் நான்கு வாரங்கள் மட்டுமே கிறிஸ்டியனுக்கு கல்வி கற்றுக் கொடுக்க ஒத்துக்கொண்டிருந்தார். ஆனால் கிறிஸ்டியனுக்கு கல்வியின் மீதிருந்த தீவிரமான ஆர்வத்தைக் கண்டு, தன்னுடைய வீட்டில் தங்கவும், இலவசமாக கல்வி கற்கவும் உதவினார். பின்னர் போதகர் லிப்பக், ட்ரேனாவிலிருந்து ஒரு மணி தூரத்திலுள்ள க்ரோப்ஜெகர் (GroBjehBer) என்ற இடத்தில் ஊழியம் செய்த போதகர் பாஸ்ச்கென்ஸ் (Paschkens) என்பவரிடம் கிறிஸ்டியனை அறிமுகப்படுத்தினார். கிறிஸ்டியன் போலே, வாரத்துக்கு மூன்று முறை பாஸ்ச்கென்ஸ் அவர்களை சந்தித்து பல்வேறு பாடங்களைக் கற்றார். கிறிஸ்டியனின் மூன்று ஆண்டு கடின உழைப்பினாலும், இரு போதகர்களின் உதவியினாலும் கல்லூரிப் படிப்பை கற்க தகுதியுடையவரானார். 1766 ஆம் ஆண்டு லெய்ப்சிக் பல்கலைக் கழகத்தில் இணைந்து இறையியல் மற்றும் தத்துவத்தை (Theology and Philosophy) கற்கத் துவங்கினார். கிறிஸ்டியன் போலே பல்கலைக் கழகத்தில் சேர அனுமதி வழங்கியவர் Rector அன்டேரேயாஸ் பெல் (Andreas Bell) ஆவார். கிறிஸ்டியன் போலேக்கு கல்வி கற்றுக் கொடுத்த பேராசிரியர்களின் பெயரும், முறையே அவர்கள் கற்றுக் கொடுத்த பாடங்களின் பெயரும், கீழ்கண்ட அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன.

| Name of the Teacher | Name of the Subject |
|---|---|
| Mr. Crusius and Prof.Schemed | Philosophy & Exegesis |
| Mr. Ernsti | Humanities and Epistles of Apostles |
| Prof. Bosseck and Lecturer Selig | Hebrew |
| Prof. Froiep | Arabic |
| Mr. Burscher | Church History |
| Prof. Bortz and Ebert | Mathematics |

கிறிஸ்டியன் லெயப்சிக் பல்கலைக் கழகத்தில் (University of Leipzig) கல்வி கற்கும் போது, அந்நகரத்திலுள்ள தூய தோமா ஆலயத்தில் இலவசமாக தங்குவதற்கு அனுமதிக்கப்பட்டது, அவருக்கு பேருதவியாக இருந்தது. அவ்வாலயத்தில் அவரோடு தங்கியிருந்த திரு.டிஜென்கோல் (Mr. Degenkohl) என்பவரோடு சேர்ந்து, வியாதியஸ்தர்களை சந்தித்து ஜெபிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். தங்குவதற்கு ஆலயத்தில் இடங்கொடுத்ததினால், கிறிஸ்டியனின் பெற்றோர்கள் பிற செலவுகளை பூர்த்தி செய்வது எளிதாக இருந்தது.

1769 ஆம் ஆண்டில் கல்லூரிப் படிப்பை முடித்து, மறுபடியும் ட்ரேனாவிலுள்ள தன்னுடைய முன்னாள் ஆசிரியர் பாஸ்ச்கென்ஸ் வீட்டில், அவரோடு 9 மாதங்கள் தங்கியிருந்தார். இக்காலகட்டத்தில் கிறிஸ்டியனுக்கு, இறையியல் கல்வியின்போது ஏற்பட்ட பல்வேறு கேள்விகளுக்கு, பாஸ்ச்கென்ஸ் தகுந்த விளக்கம் கொடுத்து, அவரின் ஐயப்பாடுகளை நீக்கினார். 1770 ஆம் ஆண்டு ஜூலை முதல் சுமார் நான்கு ஆண்டுகள் டாமேயில் (Dhame) வன அதிகாரியாக பணிபுரிந்த திரு வோன் சன்டர்ஸ்லெபன் (Mr. Von Sandersleben) என்பவரிடம் வேலை செய்தார். 1771 ஆம் ஆண்டு, டிரெஸ்டென் (Dresden)-ல் உள்ள லூத்தரன் தேவாலயத்தில் முக்கிய பொறுப்பில் இருந்த ஒருவர் கிறிஸ்டியன் போலே-ன் இறையியல் அறிவைச் சோதித்து, அவ்வாலயத்தில் போதகராக நியமித்தார். வேலை செய்து கொண்டே, லூத்ரன் சபையில் போதிக்கும் பணியையும் செய்தபோது தான், கிறிஸ்டியன் சுவிசேஷம் அறிவிப்பதின் முக்கியத்துவத்தை அதிலும் குறிப்பாக ஏழைகளுக்கு அறிவிக்க வேண்டியதின் முக்கியத்துவத்தையும் உணர்ந்தார். அப்போது ஒரு எதிர்பாராத நிகழ்வு நடந்தது. வெர்னிஜெரோடு என்ற இடத்தின் பிரபு Mr. Heinrich Ernst (Duke of Wernigerode) தன்னுடைய அவையின் (Court Catechist) போதகராக கிறிஸ்டியன் போலேவை நியமித்தார். அப்பொறுப்பு அவருக்கு பல்வேறு தரப்பு மக்களை சந்திக்கும் வாய்ப்பை பெற்றுத் தந்தது. மேலும் வாரம் ஒருமுறை சுரங்கத் தொழிலாளர்களைச் சந்தித்து வேதத்தைப் போதிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். Court Catechist - ஆக பணிபுரியும் போது தான் மிஷனரியாக செல்லும் அழைப்பைப் பெற்றார். இதற்கு ஹெய்ன்ரிச் எர்ன்ஸ்ட் (Duke of Wernigerode) என்பவருக்கு, இந்தியாவிற்கு மிஷினரிகளை அனுப்பிக் கொண்டிருந்த Francke Foundation- இருந்த தொடர்புகள், தேவனால் பயன்படுத்தப்பட்டன.

போலே ஐயர் மிஷெனரியாக செல்ல, தீர்க்கமான முடிவெடுக்க சுமார் இரண்டு ஆண்டுகளுக்கு மேல் ஆகியது. இதற்குக் காரணம், அவரின் பெற்றோருடைய தயக்கமாக இருக்கலாம். அவர் தமிழகத்தில் உள்ள தரங்கம்பாடிக்கு வர சுமார் ஆறு மாதத்திற்கு மேலாக கப்பலில் பயணிக்க வேண்டும். இதை யோசித்துப் பார்க்கும் போது, அவரின் பெற்றோரின் தயக்கம் நியாயமானதாக தோன்றுகிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கிறிஸ்டியன் போலே என்ற மாணவருக்கு சிலர் தங்க இடங்கொடுத்து, அவர் கல்வி கற்க உதவியது, பின்னாளில் இந்தியாவின் ஆரம்ப கால சீர்திருந்த திருச்சபை வளருவதற்கு பேருதவியாக இருந்தது. நாமும், நமக்கு

அருகாமையில் இருக்கும் ஏழைக் கிறிஸ்தவ மாணவர்களுக்கு ஏதாவது ஒரு வகையில் உதவி செய்வதோடு, அவர்கள் கிறிஸ்துவுக்குள் வளருவதற்கும் உதவியாக இருப்போம். மேலும் கிறிஸ்டியன் போலே மிஷனெரியாக செல்ல சில விசுவாசிகள் காரணமாக இருந்தார்கள். இவர்களுக்காகவும் நாம் கர்த்தரை ஸ்தோத்தரிப்போம். மிஷெனரிகளை உருவாக்குபவர்களை எழுப்புமாறு ஆண்டவரிடம் மன்றாடுவோம். (ரோமர் 10:15)

### SPCK ஊழியராக மாற்றப்படுதல்:

01.11.1776 அன்று கோபன்ஹகனில் (டென்மார்க்) அருட்பொழிவு பெற்ற போலே ஐயர், 19.12.1776 அன்று புறப்பட்டு, 06.06.1777 அன்று தரங்கம்பாடி வந்து சேர்ந்தார். அதே ஆண்டு அவர் திருச்சிக்கு சென்று கிறிஸ்டியன் பிரெட்ரிக் சுவார்ட்சு ஐயரோடு பணிபுரிந்தார். சுவார்ட்சு அவர்களின் பரிந்துரையின்படி, 1778 ஆண்டு போலே அவர்கள் ஆங்கிலிக்கன் மிஷனரி இயக்கமான, Society For Promoting Christian Knowledge-க்கு மாற்றப்பட்டு, 28.01.1818 அன்று வரை தான் மரிக்கும் வரை தன் சொந்த நாட்டிற்கு திரும்பிச் செல்லாமல் திருச்சியிலே ஊழியம் செய்கிறார். (எபிரேயர் 11 : 15, 16). 1793 – ஆம் ஆண்டு இராணுவ குரு (Chaplain of Garrison) பொறுப்பையும், 1801-ஆம் ஆண்டு திண்டுக்கல் பகுதி ஊழிய பொறுப்பையும், SPCK அவருக்கு கூடுதலாக வழங்கியது.

### போலே ஐயருக்கும் திருநெல்வேலிக்கும் உள்ள தொடர்பு:

1779-ம் ஆண்டு திருநெல்வேலி வந்த போலே ஐயர், கிளாரிந்தா அம்மையாரிடம் வேலை செய்த திரு ஜான் என்பவருக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறார். அதே ஆண்டு ஜான் அவர்களுக்கும், கிளாரிந்தா அம்மையாரின் வளர்ப்பு மகளான மரியம்மாள் என்பவருக்கும் திருமணம் நடத்திவைக்கிறார்.

போலே ஐயரால் தஞ்சாவூரில் அருட்பொழிவு பெற்ற சுதேச ஊழியர்கள் திருநெல்வேலி பகுதியில் ஊழியம் வளர முக்கிய பங்கு வகித்துள்ளனர். சுதேச ஊழியர்கள் போலே மற்றும் ஜான் காஸ்பர் கோலாப் ஐயர்களின் மேற்பார்வையிலேயே பணி செய்தனர்.

SPCK மற்றும் LMS மிஷெனரி இயக்கங்களிடையே ஏற்பட்ட உடன்படிக்கையின் விளைவாக, அருட்திரு. J.C. கோலாப் ஐயரால், LMS மிஷனெரி W.T. ரிங்கில் தொபே அவர்கள் திருநெல்வேலி பகுதியில் உள்ள SPCK சபைகளுக்கு மிஷெனரியாக நியமிக்கப்படுகிறார். சுமார் ஒரு வருட காலத்திற்குப் பின் SPCK சபைகள், LMS சபையாக மாறிவிடுமோ? என்ற அச்சத்தின் விளைவாக ரிங்கில்தொபே திருநெல்வேலியிலிருந்து வெளியேற்றப்படுகிறார். இதனைத் தொடர்ந்து போலே ஐயர், இலண்டனில் உள்ள லூத்தரன் குருவானவர் அருட்திரு. ஜோகன் கிறிஸ்டியன் கிறிஸ்டோப் உபலே (Johann Christian Christoph Ubele) அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் ரிங்கில் தொபே-வை மறுபடியும் திருநெல்வேலி பகுதியில் நியமிக்க வலியுறுத்துகிறார்.

1806-ம் ஆண்டு முதல் சுமார் இருபது ஆண்டுகள் ஐரோப்பிய மிஷெனரிகளின் கண்காணிப்பு இல்லாமையால் திருநெல்வேலி பகுதி திருச்சபைகள் தத்தளித்தன என்பதை கால்டுவேல் ஐயர் எழுதிய 'TINNEVELLY MISSION' என்ற புத்தகத்தின் மூலமாக அறியும் போது, போலே ஐயர் ரிங்கில் தோபே-வை மறுபடியும் நியமிக்க எழுதிய கடிதத்தின் முக்கியத்துவமும், திருநெல்வேலி பகுதி ஊழியத்தின் மீது அவருக்கு இருந்த கரிசனை நமக்குப் புலப்படுகிறது. (IIகொரி11:28)

### சுதேச ஊழியர்களின் அருட்பொழிவுக்கு முயற்சி எடுத்த போலே ஐயர்:

1790 ஆம் ஆண்டு சுவார்ட்ஸ் ஐயர் அவர்களால், அருட்திரு. சத்தியநாதன் அவர்கள் அருட்பொழிவு பெற்ற பின் சுமார் 21 ஆண்டுகள் எந்த சுதேச ஊழியருக்கும் அருட்பொழிவு நடக்கவில்லை. 15.05.1809 அன்று SPCK-க்கு போலே ஐயர் எழுதிய கடிதம் மற்றும் அவர் J.C.கோலாப் ஐயரோடு எடுத்த கூட்டு முயற்சியின் விளைவாக கீழ்க்கண்டவர்கள், போலே ஐயரால் தஞ்சாவூரில் லூத்தரன் முறைபடி அருட்பொழிவு பெற்றனர்.

**போலே ஐயரால் அருட்பொழிவு பெற்றவர்கள்**

| பெயர் | ஆண்டு | ஊழியம் செய்த இடம் |
|---|---|---|
| Rev. ஆபிரகாம் | 17.03.1811 | பாளையங்கோட்டை |
| Rev. ஞானபிரகாசம் | 17.03.1811 | தஞ்சாவூர்,வேலூர்,வெப்பேரி |
| Rev. அடைக்கலம் | 17.03.1811 | தஞ்சாவூர் |
| Rev. வேதநாயகம் | 17.03.1811 | பாளையங்கோட்டை |
| Rev. பாக்யநாதன் | 1817 | தஞ்சாவூர் |
| Rev. விசுவாசநாதன் | 1817 | நாசரேத் |
| Rev. நல்லத்தம்பி | 1817 | |

### போலே ஐயரின் குடும்பம்:

26.04.1795 அன்று கடலூரில் போலே ஐயரின் திருமணம் நடைபெற்றது. கைக்கடிகார வியாபாரியான திரு மைக்கேல் வின்செண்ட் என்பவரின் மகளான மரியன்னாவை, தன்னுடைய 51 வயதில் மணந்தார். அவருடைய மூன்று மகன்களின் பெயர் கிறிஸ்டியன், நத்தானியேல் மற்றும் உரியல் ஆகும். அவருடைய மகன்களைக் குறித்த பிற தகவல்களை அறிய முடியவில்லை.

### போலே ஐயரின் வாழ்வில் இருந்து நாம் கற்றுக்கொள்ளும் பாடங்கள்:

1. போலே ஐயர் தன்னுடைய கடிதங்களில், தான் மறுபடியும் தரங்கம்பாடி பகுதியில் ஊழியம் செய்ய விரும்புவதையும், சக ஊழியர்களோடு உள்ள கருத்து வேறுபாட்டையும் பதிவுசெய்கிறார். ஆனாலும் மரிக்கும் வரை தொடர்ச்சியாக 40 ஆண்டுகள் திருச்சியில் பணிபுரிகிறார். (IIதீமோ 2 : 3)
2. ஜெர்மனியில் உள்ள ஹாலே நகரில் உள்ள ஆதரவற்றோர் இல்லத்தில் தங்கிக் கல்வி பயின்ற தன்னுடைய சகோதிரியின் மகன்களான ஜோகன் ஜார்ஜ் ராக் மற்றும் ஜோகன் காட்பிரைடு ராக் ஆகியோருக்கு 13 ஆண்டுகள் உதவித்தொகை அனுப்புகிறார். (1 தீமோ 5:8)

3. 1785 ஆம் ஆண்டு எழுதிய கடிதத்தில், தான் திருமணம் செய்ய விரும்புவதாக கூறினாலும், சுமார் 10 வருடங்கள் கழித்துதான் 26.04.1795 அன்று கடலூரில் அவரின் திருமணம் நடைபெற்றது. 19-ஆம் நூற்றாண்டில், ஒரு மிஷெனரிக்குத் தன் மகளை திருமணம் செய்து வைக்க முடிவெடுத்த பெற்றோருக்காக கர்த்தரைத் துதிப்போம். திருமணம் தடைப்பட்டு தள்ளிப் போனாலும், திருமறை போதிப்பது தடைபடாமல் ஊழியம் செய்தார். (பிலி 3:13(பி)-14)
4. நோய்வாய்ப்பட்ட இராணுவ வீரர்களை சந்தித்து ஜெபிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.
5. விவிலியத்தின் அடிப்படை சித்தாந்தங்களுக்கு (Doctrines) மிகுந்த முக்கியத்துவம் கொடுத்தார். Syrian Orthodox Seminary-ல் இறையியல் கல்வி பயின்றவர்களை SPCK மிஷனரியாக நியமிக்கலாமா என்ற கேள்வி எழுந்தபோது, 16.03.1810 அன்று எழுதிய கடிதத்தில், Syrian Orthodox Chuch-ன் கொள்கைகள் சீர்திருத்த கிறிஸ்தவத்தில் இருந்து எவ்வாறு வேறுபட்டது என்று எழுதி, SPCK – Syrian Orthodox ஒப்பந்தம் நிறைவேறாதபடி தடுத்தவர்களில் போலே ஐயரும் ஒருவர் ஆவார். (கலா 6:9)

**போலே ஐயரின் வருத்தம்:**

உள்ளூர் கிறிஸ்தவ விசுவாசிகளின் பொறுப்பற்ற மற்றும் சாட்சியற்ற வாழ்க்கையைப் பார்த்து மிகவும் சோர்வடைந்து விட்டேன் என்று கூறுகிறார். மேலும் இந்தியக் கிறிஸ்தவர்களின், கிறிஸ்தவ குணங்கள் சீரற்ற தன்மையுடையவை, அதாவது எல்லா சூழ்நிலைகளிலும், அவர்கள் ஆவிக்குரிய கனிகளை வெளிப்படுத்துவதில்லை என அங்கலாய்க்கிறார்.

போலே ஐயர் மரித்து 200 ஆண்டுகள் ஆனாலும், இந்தியக் கிறிஸ்தவர்களின் நிலைமை இன்னும் சீரற்ற ஆவிக்குரிய குணங்களை உடையதாகவே உள்ளது. அவரின் விருப்பத்தை நிறைவேற்ற, நாம் சீரான, சூழ்நிலைகளால் பாதிக்கப்படாத கிறிஸ்தவ குணங்களை வெளிப்படுத்த வாஞ்சிப்போம்.





கிறிஸ்தவ
# வரலாற்றுச் சுவடுகள்

**மாத ஆய்விதழ் சந்தா விபரம்**

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

**வங்கி விபரம்**

**Name: Tinnevelly Christian Historical Society**
**A/c Number : 1748 020000 3684**
**Bank name : Federal Bank**
**IFSC code: FDRL0001748**

"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்"
மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள
G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற எண்ணுக்கு செலுத்தவும்
காசோலை மற்றும் வரைவோலை செலுத்த
'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்'
( Tinnevelly Christian Historical Society )
என்ற பெயரில் எடுக்கவும்



**ஆசிரியர்**

**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
**கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,**
**பங்களாச் சுரண்டை-627859,**
**தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)**
**04633 290401, 91767 80001**






christianhistorical@gmail.com

# சேலம்

# பெண்கல்வி முயற்சிகளின் முன்னோடிகள்

ஜே. பர்னபாஸ்
சேலம் வரலாற்றுச் சங்கம்

**சேலம் முதல் பெண்கள் பள்ளிக்கூடம் - 1829 :**

வசதியும், அதிகாரமும் படைத்தோரின் குழந்தைகளும், உயர்குலத்தோரின் குழந்தைகளும், அப்போது சேலம் நகரத்திலும், அதன் சுற்றுவட்டாரங்களிலும் நடத்தப்பட்டுவந்த ஒரு சில திண்ணைப் பள்ளிகளில் படித்துவந்தனர். இஸ்லாமியர்களின் குழந்தைகள் தங்கள் மதரசாக்களில் படித்துவர, மற்றபடி வேறுயாரும் பெரும்பான்மையானோர் படிக்க வாய்ப்பில்லாமல் தங்கள் குலத்தொழில்களை தந்தைமார்களுடன் சேர்ந்து பயின்று வந்தனர். பெரும்பாலான ஆண்கள் படிப்பு வாசனையே இல்லாமல் இருந்தனர்; பின்பு பெண்களைப் பற்றி என்ன சொல்வது? அடுப்பு ஊதும் பெண்களுக்கு படிப்பு எதற்கு? என்று கேள்விகேட்ட கொடுங் காலம் அது. வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போம் என்ற விந்தை மனிதர்கள் வாழ்ந்த அது.

அந்த காலத்தில்தான் அன்றைய ஆங்கிலேய அரசாங்கம் வழங்கிய நான்கு இலவச ஆரம்ப கல்வி போதிக்கும் பொதுப் பள்ளிகளை, அன்றைய சேலம் நகரின் நான்கு முக்கியமான பகுதிகளில் நடத்தி, **'சேலம் - ஆரம்ப கல்வியின் தந்தை'** என்ற புகழ்ச்சியைப் பெற்றவர்தான், சேலம் வந்த முதல் சீர்திருத்த கிறிஸ்தவத் திருத்தொண்டர் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் (Rev. Henry Crisp, L.M.S., -Father of Primary Education in Salem). ஆண்பிள்ளைகள் மட்டும் படித்தால் போதுமா? பெண்பிள்ளைகளும் படிக்க வேண்டுமே, அதற்கான கவலை ஐயரின் இளம் மனைவி எலிசா ஸ்டெப்பி அம்மையாரின் உள்ளத்தில் உறுத்தியது. 1829 ஆம் ஆண்டு திருமதி. எலிசா ஸ்டெப்பி அம்மையாரின் முன்னெடுப்பு மற்றும் ஆலோசனைகளின்படி பெண்பிள்ளைகளுக்கான ஒரு ஆரம்ப பாடசாலை அன்றைய சேலம் நகரில் நிறுவப்பட்டது.

**சித்தூரிலிருந்து வந்த இளம் தமிழ்ப் பெண் :**

இந்தப் பள்ளிக்கூடத்தை திறம்பட நடத்த தமிழ், தெலுங்கு, பெர்சியன், மற்றும் ஆங்கிலம் எழுத, படிக்கத் தெரிந்த இளம் இந்திய கிறிஸ்தவ பெண் ஆசிரியை ஒருவரை சித்தூரிலிருந்து வரவழைத்தார்கள். இந்த இளம் பெண்ணும்,



திருமதி. எலிசா அம்மையாரும், அன்றைய சேலம் நகரத்தின் தெருக்களில் வீடுவீடாகச் சென்று பெண்பிள்ளைகளை பள்ளிக்கூடத்திற்கு அழைத்து வந்து உணவு, உடை கொடுத்து ஆரம்பக் கல்வி கற்றுத்தந்த பாங்கை என்னவென்று சொல்வது. இந்த இரண்டு இளம் பெண்களுமாகச் சேர்ந்து அன்றைய ஆணாதிக்க மடமைவாத கோட்டையை தகர்த்தெறிந்தது ஒரு மௌனப் புரட்சிதான். இப்படி இவர்கள் இருவரும் பெண்கல்வி, பெண் விடுதலை, பெண்கள் முன்னேற்றம், என்று செயல்பட்ட துணிவை என்னவென்று சொல்வது ?

**ஒரு கல்லும் சொல்லாத கதை :**

அன்று சேலம் நகரில் துவங்கப்பட்ட முதல் பெண்கள் பள்ளிக்கூடத்தின் பணிகளில், அலைச்சல்களில், எதிர்ப்புகளில், போராடி நாளும் சாதித்துவந்த அந்த சித்தூர் இளம் பெண் ஆசிரியை, அன்றைய கொடிய உயிர்க் கொல்லி நோயான காலரா தாக்கி, பெண்கல்விக்கான முன்னோடி திட்டங்களுடன் பணிதுவக்கி செய்துவந்த அந்த சவாலான ஐந்து நாட்களின் முடிவிலே அகால மரணமடைந்தார்.

அனைவருக்கும் கல்வி, அனைவருக்கும் நற்செய்தி அறிவித்தல், என்று அன்றைய சேலம் நகரில் ஓயாமல் உழைத்துவந்த கிறிஸ்பு தம்பதியினர் இந்த இளம் மங்கையின் அகால மரணத்தால் நிலைகுலைந்து போனார்கள். யாருமற்ற அநாதைபோல அந்த இளம் நங்கையின் உடல் சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தில் நல்லடக்கம் கண்டது.

**'இப்படியாக நான் வாழ்ந்தேன்; இப்படியாக நான் மரித்தேன்; நான் எங்கே விதைக்கப்பட்டேன் என்று ஒரு கல்லும் சொல்லாத நிலையில் நான் கடந்துசெல்கிறேனே!'** என்று புலம்பிய ஒரு ஆங்கிலக் கவிஞனுக்கு நேர்ந்தது போலவே இந்த இளம்பெண்ணுக்கும் நேர்ந்தது. பெயர் குறிப்பிடப்படாத ஒரு மண் புதைகுழியில் (Earthen Grave) அடக்கம் செய்யப்பட்டு நினைவுச் சின்னம் இல்லாமல் மறக்கப்பட்டுப்போனார் அந்த இளம் பெண், ஆனால் அவள் வாழ்வு வரலாற்றில் ஒரு ஒளிரும் தியாக தீபம்.

**மறையுரையாளர்களின் புகழ் அஞ்சலி :**

இந்த சோக சரித்திரத்தை தனது 'A Hundred Years of Salem Mission History, 1936' என்ற நூலின் இறுதியுரையில் சங்கை T. C. விட்னி ஐயர் இவ்வாறு எழுதி அந்த இளம் பெண்ணுக்கான புகழ் அஞ்சலியை செலுத்தியிருக்கிறார். 'சேலத்தில் எவ்வாறு பெண்கல்விக்கான அடித்தளம் அன்று நிறுவப்பட்டது என்ற உண்மை அன்று அவர்களுக்கு சொல்லப்பட்டது. அது என்னவென்றால் சேலம் பெண்கள் பள்ளிக்கூடத்தில் பணிசெய்வதற்காக சித்தூரிலிருந்து அழைத்து வரப்பட்ட அந்த இளம் பெண்ணைப் பற்றி சிறப்பாக இங்கே குறிபிட்டுச் சொல்லவேண்டியிருக்கிறது. ஏனெனில் பள்ளி துவங்கிய ஒரு சில நாட்களிலேயே அவர் அந்த நாட்களின் கொடிய உயிர்கொல்லி நோயான காலரா தாக்கி பெண்கல்வி முயற்சிகளின் முன்னோடியாக களப்பலி ஆனார்.' என்பதே. இவரைப்போலவே சங்கை W. J. ஹேட்ச் ஐயரும் தனது 'Men's Report -Salem - 1927- Rev.W.J.Hatch 'என்ற தனது மிஷன் ரிப்போர்ட்டில் இந்த இளம் பெண்ணைப் பற்றிய வரலாற்றைப் பதிவு செய்திருக்கிறார். அதை இங்கே அப்படியே தருகிறேன் 'A girl's school was commenced in 1829, but there was no educated indian women in Salem so the teacher had to be brought down from Chittor, 200 miles away, but she died of cholera after 5 days service.'

**சேலம் மண்ணில் விதைக்கப்பட்ட முதல் ஐரோப்பிய சீர்திருத்த கிறிஸ்தவத் திருத்தொண்டர்:**

ஓயாத உழைப்பு, தீராத அலைச்சல், சேலத்தின் கொடிய வெப்பம், தொடர்ந்து வந்த உடல் உபாதைகள், இவைகளால் பாதிப்படைந்த திருமதி. எலிசா ஸ்டெப்பி அம்மையார், தனது இரண்டாவது பிள்ளைப் பேற்றில் ஏற்பட்ட சுகவீனம் காரணமாக, தனது 24 ஆவது வயதிலே, ஒன்றரை வயது பெண் குழந்தை, பிறந்து சில நாட்களே ஆன தற்போதைய புதிய வரவான மற்றுமொரு பெண் குழந்தை, இவர்கள் இருவரையும் காப்பாற்றும் பொறுப்பில், சவாலான சேலம் மிஷன் நிர்வாகப் பொறுப்புகளில் ஆதரவற்று நின்ற சங்கை கிறிஸ்பு ஐயர், ஆகிய இவர்களை தவிக்க விட்டுவிட்டு, சேலத்தில் அகால மரணமடைந்து, சேலம் மண்ணில் விதைக்கப்பட்ட முதல் ஐரோப்பிய சீர்திருத்த கிறிஸ்தவத் திருத்தொண்டராக, வரலாற்றில் இடம் பெற்றார். சித்தூரிலிருந்து வந்து இங்கே நித்திய இளைப்பாறுதலுக்குள் பிரவேசித்த இளம்பெண் - அவள் புதைக்கப்பட்ட இடத்திற்கு அருகிலே, ஐரோப்பியர்களின் வரிசையில் தனக்கென ஒரு இளைப்பாறும் ஸ்தலத்தை தேடிக்கொண்ட ஸ்டெப்பி அம்மையார் சேலம் பெண்கல்வி முயற்சிகளின் முன்னோடி ஆவார்.

**திருமதி. எலிசா ஸ்டெப்பி அம்மையார்:**

சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தின் நுழைவு வாயில் அருகே, வரலாற்று ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும், உதவியாக ஒரு புதிய வழிகாட்டி நினைவுச் சின்னம் சேலம் வரலாற்றுச் சங்கத்தினரால் அமைக்கப்பட்டு, அது கடந்த 23-01-2013 அன்று சேலம் மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. K. மகரபூஷணம் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. அதில் சேலம் வரலாற்றில் நிலைத்த புகழ்பெற்ற 30 வரலாற்று நபர்களின் கல்லறைகளை அவர்கள் மரணமடைந்த ஆண்டின்படி வரிசைபடுத்தி, அந்த வரலாற்று நபர்களின் கல்லறைகளின் பட்டியலை கருப்பு கிரானைட் கற்பலகைகளில் பொறித்து, அவைகளை அந்த புதிய வழிகாட்டி நினைவுச் சின்னத்தில் பதித்து வைத்தோம். இந்த நினைவுச் சின்னத்தில் 'Christian Missionaries 'என்ற தலைப்பில் முதலாம் நபராக, 'வரிசை எண் :13, மரண ஆண்டு :1829, Eliza Steffe, wife of Rev. Henry Crisp - Pioneer of Women's Education in Salem ' என்று உளிவெட்டாக பொறித்து, வெள்ளி வர்ணம் கொடுத்து, சேலம் பெண்கல்வி முயற்சிகளின் முன்னோடி திருமதி. எலிசா ஸ்டெப்பி அம்மையாருக்கு சேலம் வரலாற்றுச் சங்கம் நன்றிக்கடன் செலுத்தியிருக்கிறது.

**'ஒரே ஒரு வாழ்க்கை அதுவும் சீக்கிரமே கடந்துபோகிறது. அதில் கிறிஸ்துவுக்காக நீங்கள் எதை சாதித்தீர்களோ அது மட்டுமே நிலைக்கும்.'** - சங்கை C. T. ஸ்டட் ஐயர்.

# வரலாற்று சுற்றுப்பயணம்

தென்னிந்திய திருச்சபை கோவை திருமண்டலம் ரத்தினபுரி சேகர பெண்கள் ஐக்கிய சங்கத்தினர் மிஷன் வரலாற்றுச் சுற்றுப்பயணமாக தென் தமிழகத்தில் இறைப்பணியாற்றிய மிஷனெரிகள் நினைவிடங்களையும் அவர்கள் உருவாக்கிய பணித்தளங்களையும், ஆலயங்களையும், இன்றைக்கு இருக்கும் திருச்சபை வளர்ச்சிப் பணிகளையும் பார்வையிடுவதற்கு திருச்சபையின் குருவானவர் அருள்திரு. விக்டர் பிரேம்குமார் ஐயா தலைமையில் சுமார் 54 பேர் இரண்டு நாள் சுற்றுப்பயணமாக (14,15-08-2023) வந்திருந்தார்கள். அவர்களை திருநெல்வேலி-கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் சார்பில் இரண்டு நாட்களுக்கும் ஏற்பாடுகள் செய்திருந்தனர். அதன் படி முதல் நாள் காலை வட திருநெல்வேலி என்று அழைக்கப்படும் தற்போதைய மதுரை-இராமநாதபுரம் திருமண்டலம் விருதுநகர் மாவட்டம் சிவகாசி அருகேயுள்ள சாட்சியாபுரம் பகுதியில், சி.எஸ்.ஐ. எல்வின் மாற்றுத்திறனாளிகள் மற்றும் மனவளர்ச்சி குறையுடையோர் பள்ளியில் காலை உணவு ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. சாட்சியாபுரம் கிழக்கு வட்டகை தலைவர் அருள்திரு. A. டேவிட் ஜெபராஜ் ஐயரவர்கள் மற்றும் சேகர பிரதிநிதிகள் சிறப்பாக வரவேற்று உபசரித்தார்கள் அப்பள்ளியின் தலைமையாசிரியர் வரலாற்றை மிக அருமையாக திருச்சபை மக்களோடு பகிர்ந்து கொண்டார்கள்.

அடுத்ததாக நற்செய்தி பணியில் வெற்றியடைய தீட்டும் திட்டங்களில் மிகச் சிறந்த வழி இயேசு காட்டிய வழியே. அது கோதுமை மணிபோல் நிலத்தில் விழுந்து சாவதே. என்று சொன்ன வட திருநெல்வேலி அப்போஸ்தலன் கனம் T. G. ராக்லாந்து ஐயர் நினைவிடம் சென்றோம். ராக்லாந்து திருச்சபை உறுப்பினர் வரலாற்றை பகிர்ந்து கொண்டார்கள்.

வட திருநெல்வேலியில் சுற்றித் திரிந்து நற்செய்தி சொல்லும் முறையின் மூலம் கிராமங்களுக்கு நற்செய்தியை பறைசாற்றியவர். கற்களும், தூசிகளும் அவரை நோக்கின. தடியால் சரமாரியாக அடிகள் வாங்கியவர். நடக்கக் கூட தெரியாத சிறு பையனும் கூட கல்லைத் தூக்கி எறிந்ததுதான் பரிதாபம். மழை, வெயில், பசி, அவமானம், பேச்சுக்கள், சரீர துன்பங்கள் எதையும் பொருட்படுத்தாது தன் ஊழியப் பணியைத் தொடர்ந்தவர். அதிகாலையில் எழுந்து ஜெபிக்கும் பழக்கமுடையவர். ஆயிரத்திற்கு மேற்பட்ட கிராமங்களில் சுவிசேஷத்தை அறிவித்த சுவிசேஷச் செம்மலின் பணிகளையும் நினைவு கூர்ந்தோம். எங்களை வரவேற்ற ராக்லாந்து சேகர தலைவர் அவர்களுக்கும் சபை மக்களுக்கும் உறுப்பினர்களுக்கும் நன்றி.

வட திருநெல்வேலி சுற்றுப்பயணத்தின் முக்கிய பனித்தளமான பனையடிப்பட்டிக்கு வந்து சேர்ந்தோம். ஜான் தியாப்பிலஸ் ஜார்ஜ் பேரன் புரூக் ஐயரவர்கள் இந்தியாவில் நமது தமிழ்நாட்டில் 1844 - 1858 வரை திருநெல்வேலி மாவட்டம் சுரண்டை பகுதிகளில் ஏறத்தாழ 14 ஆண்டுகள் மிஷனரிப் பணி செய்து, பின் ஓராண்டு சிவகாசி பகுதியில் பணியாற்றி, விருதுநகர் மாவட்டம் பனையடிபட்டி கிராமத்திற்கு அருகிலுள்ள செந்தட்டி அய்யனார் கோவில் என்ற கிராமத்தில் அருட்பணி செய்ய சென்றபோது காலரா நோயினால் பாதிக்கப்பட்டு 1858 மார்ச் 29ம் தேதி, தனது 40 வது வயதில் மரித்துப் போன பேரன்புரூக் அவர்களை நினைவு கூர்ந்தோம்.







வட திருநெல்வேலி ஊழியங்களின் நட்சத்திரங்களில் ஒருவரான கனம்.எவ்ரி (Every) அவர்களின் கல்லறை மற்றும் கர்த்தரின் பந்தியில் வா சகோதரா கர்த்தரின் பந்தியில் வா என்ற பாடலும் மற்றும் நல்ல பல கீர்த்தனைகளை நமக்கு

தந்த ஸ்ரீவைகுண்டம் மேசியா நகர் மரியான் உபதேசியார் அவர்களின் கல்லறை மற்றும் பாட்டகரை அருள்திரு. விசுவாசம் ஞானமுத்து ஐயா அவர்களின் நினைவிடத்தில் அவர்கள் செய்ய பணிகளை நினைவு கூர்ந்தோம். எங்களை வரவேற்ற பனையடிப்பட்டி சேகர குரு அருள்திரு. பிரவீன் அவர்களுக்கும் கமிட்டி உறுப்பினர்களுக்கும் மிகுந்த நன்றியை தெரிவித்துக்கொள்கின்றோம்.

தென்காசி மாவட்டம் சாம்பவர் வடகரை ராவ் சாகேப் ஆபிரகாம் பண்டிதர் அவர்கள் ஆசிரியராக, சித்த மருத்துவராக, கவிஞராக, தமிழிசை ஆய்வாளராக தொண்டாற்றிய ஆபிரகாம் பண்டிதர் தமிழிசை உலகின் நீண்ட இருளைக் கிழித்து வெளிவந்தவர் ஆபிரகாம் பண்டிதர். பண்டிதர் அவர்களுக்கு ஆகஸ்ட் மாதம் சிறப்பு மாதமாகும் அவருடைய பிறந்தநாள் மற்றும் நினைவு மாதத்தை முன்னிட்டு சாம்பவர்வடகரையில் உள்ள அவரது இல்லத்தை பார்வையிடவும் சென்றோம் அங்கு சேகர குருவான அருள்திரு. A. ஜெபரத்தினம் அவர்கள் பண்டிதர் தமிழுக்கும், இசைத்தமிழுக்கும் செய்த பணிகளையும் குறித்து விவரித்தார்கள். அங்கு மதிய உணவு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அதன் பின்பு நூற்றாண்டை கடந்த ஜெபாலயம்; மக்களுக்காக உழைத்த மருத்துவர் பெரியண்ணன், மருத்துவர் சின்ன அண்ணனின் (குற்றாலத்தைப் பூர்விகமாகக் கொண்ட ஏசுதாசன் என்பவர் - 'பெரியண்ணன். எர்னஸ்ட் போர்ரேச்ட்டர் பேட்டன் சின்ன அண்ணண்) குற்றாலம் கிறிஸ்துகுல ஆசிரமம் சென்று இரவு தங்குவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டு இருந்தது. கிறிஸ்துகுல ஆசிரமம் வரலாறுகளையும், நம் தமிழர்களின் கட்டிடக் கலை பாணியிலேயே கட்டப்பட்ட ஜெபாலயம் வரலாறு பற்றி தெரிந்து கொண்டோம்.





இரண்டாம் நாள் காலை நட்சத்திர கூட்டம் நோக்கி பயணம் "ஏமி கார்மைக்கல்: சாம்பலுக்கு அழகூட்டிய சாதாரண மங்கை" தேவதாசி என்பவர்கள் பெரும் கோயில்களில் திருப்பணிக்காகவும், சேவைக்காகவும் சிறுவயதில் நேர்ந்து விடப்பட்ட பெண்கள் அவர்களை கிறிஸ்துவை வாழ்நாளெல்லாம் நேசித்து தியாகங்கள் பல செய்து தன்னுடைய சுகதுக்கங்களுக்கு மதிப்பளிக்காமல் சேவை செய்திருக்கும் ஏமி கார்மைக்கலை நாம் எப்படி மறப்பது ? சமுதாயத்தில் புறக்கணிக்கப்பட்ட பூப்போன்ற குழந்தைகளை அதன் கோரமான அரக்கத்தனத்தில் இருந்து காப்பாற்றி வளர்த்த சமூகசேவையை ஏமி தனியொருவராக பல்வேறு எதிர்ப்புகளுக்கு மத்தியில் செய்திருக்கிறார். சமூகப்பணியைக் கிறிஸ்தவரல்லாதவர்களும் செய்யலாம், செய்து வருகிறார்கள்; அது கிறிஸ்தவர்களின் தனிப்பட்ட சொத்துரிமையல்ல. ஆனால், ஏமியின் சமூகத் தொண்டு கிறிஸ்துவில் அவர் வைத்திருந்த அன்பினால் உருவான தன்னலமற்ற தொண்டு. தமிழ் சமூகத்தில் நிலவி வந்த அகோரத் தீங்கை, குழந்தைகளுக்கு இழைக்கப்படும் கொடுமையை வெறுத்து, ஆபத்துக்களைச் துச்சமாக எண்ணி குழந்தைகளை அவர் எப்படி காப்பாற்றிப் பாதுகாத்தார். கிறிஸ்துவின் அன்பு மட்டுமே ஒருவரை இதைச் செய்யவைக்கும் என்ற அன்பை மலர் அம்மா வரலாற்றை பகிர்ந்து கொண்டார்கள். வாழ்க்கைக்கு பயனுள்ள தகவல்களை கேட்டுக் கொண்டோம்.

நெல்லையின் முதல் இரத்த சாட்சி தாவீது சுந்தரானந்தம் உருவாக்கின முதல் கிறிஸ்தவ கிராமத்தை பார்வையிட நேரம் இல்லாமையால் பார்க்க முடியவில்லை.

அதன் பின்பு திராவிடம் என்ற இனத்துக்கு மூல முகவரி தந்த திராவிட ஒப்பிலக்கண தந்தை பேராயர் கால்டுவெல் அவர்களின் நினைவிடம் சென்றோம். சேகர தலைவர் சார்பாக உபதேசிமார்கள் வரவேற்றார்கள். தென்னிந்திய மொழிகளுக்கான ஒப்பிலக்கண நூல் மற்றும் அவர் எழுதிய 'திருநெல்வேலி மாவட்டத்தின் அரசியல் மற்றும் பொது வரலாறுகள், சங்க இலக்கியங்கள், அகழ்வாய்வுகளில் ஈடுபட்டுப் பல பண்டைய கட்டிடங்களின் அடிப்படைகளையும், ஈமத் தாழிகள், நாணயங்கள் முதலானவற்றையும் வெளிக் கொணர்ந்துள்ளார் என்ற வரலாற்று தகவல்களையும் சிறகுகள் ஜெபக்குமார் அவர்கள் மிக சிறப்பாக பகிர்ந்து கொண்டார்கள்.

அனைவருக்கும் கிறிஸ்தவ வரலாற்றுச் சங்க ஒருங்கிணைப்பாளர் மன்னா செல்வக்குமார் நன்றி தெரிவித்தார். இந்த மிஷன் வரலாற்றுச் பயணத்திற்கு அனைத்து வகையிலும் உதவி செய்த அனைவருக்கும் மற்றும் கோவை ரத்தினபுரி சேகர பெண்கள் ஒவ்வொருவருக்கும் வரலாற்றுச் சங்கம் சார்பாக நன்றியை தெரிவித்துக்கொள்கின்றோம்.

**அருள்திரு H ஜான் சாமுவேல்**
திருமறையூர்



# திருமறையூர் இறையியல் கல்லூரி வரலாறு

நாசரேத் மாநகரில் 1900 ம் வருடம் கனம் மர்காஷியஸ் ஐயரவர்கள் 8 மாணவர்களுடன் நாசரேத் இறையியல் கல்லூரியை (Nazareth Theological Seminary) ஆரம்பித்தார்கள்.

கனம் மர்காஷியஸ் ஐயரவர்களின் காலத்திற்கு பின்னர் 1910ம் வருடம் கனம் C.W. வெஸ்டன் ஐயரவர்களின் காலத்தில் கல்லூரி புதிய வடிவத்தை பெற்றது. நாசரேத் இறையியல் கல்லூரி என்ற பெயரில் இருந்து பிஷப் இறையியல் கல்லூரி (Bishop Theological Seminary) என்ற புதிய பெயரை பெற்றது. மாணவர்களின் எண்ணிக்கையை உயர்த்த எண்ணி புதிய கட்டிடங்களுக்கு அஸ்திபாரமிட்டு புதிய கட்டிடங்கள் எழும்பின. 1913ம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 6ம் தேதி அன்று மறுரூப சிற்றாலயம் என்ற பெயரில் இறையியல் கல்லூரிக்கான சிற்றாலயம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. 1918ம் ஆண்டு முதல் அருட்பொழிவு இச்சிற்றாலயத்தில் நடைபெற்றது. இச்சிற்றாலயம் இன்றும் புனித லூக்கா மருத்துவமனை வளாகத்தில் காணப்படுகின்றது.

1936ம் வருடம் பேராயர் நீல் அவர்கள் இக்கல்லூரிக்கு Bishop Theological Seminary என்ற பெயரிலிருந்து Bishop Theological College என்று புதிய பெயர் மாற்றத்தை அறிமுகப்படுத்தினார்கள். வேதாகம கல்லூரிக்கு தனியே நல்லதொரு இடம் வேண்டுமென்று விரும்பிய கனம் நீல் ஐயரவர்கள் வேதாகம கல்லூரிக்கென்று ஒரு இடத்தை வாங்கினார்கள்.

நீல் ஐயரவர்கள் நாசரேத் நகருக்கு தெற்கே தேரி பூமியில் 30 ஏக்கர் நிலத்தை வாங்கி சுற்றிலும் இரும்பு வேலி அமைத்து 1937ம் ஆண்டு பிப்ரவரி 18ம் தேதி அவ்விடத்தில் முதல் கட்டிடம் கட்ட அஸ்திபாரம் அமைத்தார்கள். 1938ம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்திற்குள் இரண்டு பெரிய பங்களாக்களும், இந்திய ஆசிரியர்களுக்காக நான்கு பங்களாக்களும், குருபட்டம் பெறும் மாணவர்களுக்காக 16 வீடுகளும், உபதேசிமார் மாணவர்களுக்காக 18 வீடுகளும், வேலைக்காரர்களுக்காக 6 சிறு வீடுகளும், இரண்டு வகுப்பறைகளும் கட்டி முடிக்கப்பட்டது.

மாணவர்களுக்கான சிற்றாலயம் இந்திய முறைப்படி விளங்கும் பிரகாரத்தையும் சிற்ப கற்றூண்களையும் சிங்காரமாய் விளங்கும் கோபுரத்தையும் உடைய அலங்காரத்தோடு ஆகஸ்ட் மாதம் 2ம் தேதி 1941 ம் வருடம் பேராயர் நீல் அவர்கள் பிரதிஷ்டை செய்தார்கள். இன்சுவை கொண்ட தண்ணீருடைய 4 கிணறுகளையும் உடைய குடியேற்றத்தை பெரும் செலவில் நிர்மானித்து அதற்கு **பரிசுத்த வேதாகம பதி என்று அர்த்தங்கொள்ளும் திருமறையூர்** என்ற பெயரை சூட்டினார்.

இதற்கிடையே கல்கத்தாவில் Bishop Theological College என்ற பெயரில் மற்றொரு கல்லூரி இயங்கிக் கொண்டிருந்தது. இரு பெயரும் ஒன்றாக இருந்தினால் பெயரில் ஒரு சில குழப்பங்கள் ஏற்படவே பெயர் மாற்றத்திற்கான முயற்சிகள் எடுக்கப்பட்டு புதிய பெயர் சூட்டப்பட்டது. 1945ம் வருடம் Bishop Theological College என்ற பெயரில் இருந்து திருநெல்வேலி இறையியல் கல்லூரி (Tirunelveli Theological College) என்ற பெயரை பெற்றது. பின்னர் 1950ம் வருடம் இப்பெயர் மாற்றப்பட்டு தமிழ்நாடு இறையியல் கல்லூரி (Tamilnadu Theological College) என்ற புதிய பெயரை பெற்றது.

திருச்சபைகளின் ஒன்றிணைப்பு காரணங்களால் 1969ம் ஆண்டு முதல் மதுரைக்கு இக்கல்லூரி மாற்றப்பட்டது.

# புரட்சிப்புயல் ஏமிகார்மைக்கேல்

## நெடுந்தொடர் -அத்தியாயம்-16

முனைவர் ஜான்சி பால்ராஜ்,
திருநெல்வேலி

வேண்டா....வேண்டாம் போக வேண்டாம்....

நானும் வருவேன்...

எப்போ திரும்பி வருவீங்க அப்பா? என்று குழந்தைகள் ஒவ்வொருவரும் உவாக்கரை சூழ்ந்து நின்று அன்புத்தடைப் போட்டனர்.

ஏன்டா இப்படி சொன்னா அப்பா எப்படி போவது.!? நான் தான் போய்விட்டு பத்து நாட்களில் வந்து விடுவேனே. உவாக்கரின் தோளில் மேமா கால்களை இரண்டு பக்கமும் போட்டு தலையில் முகத்தை வைத்து கழுத்தைக் கட்டியபடி செல்லமாய் சிணுங்கினாள். அவரது மடியிலிருந்த மதியா தன் ஒரு காலை அவர் முகத்துக்கு நேரே தூக்கி விளையாடிக் கொண்டிருந்தாள். தினமும் மாலைவேளை குழந்தைகளோடு பூந்தோட்டத்திற்கு உவாக்கரும் மனைவி பர்தாவும் வந்து விடுவார்கள். கொஞ்சம் மேடான பகுதியில் உவாக்கர் அமர்ந்து கொண்டு தனது காலில் குழந்தைகள் ஒவ்வொருவராய் ஏறி நிற்க, குழந்தையின் கைகளைப் பிடித்தவாறு தனது கால்களை மேலும் கீழும் ஆட்டுவார். உவாக்கரின் பிரம்பு கால்கள் குழந்தைகளின் அன்பு ஊஞ்சல்.

நான்தான் முதலில்.... நான்தான்... என்று அவரை, அப்பா, அப்பா என்று அழைக்கும் அந்த இன்பச் சத்தத்தைக் கேட்கவே இருவரும் அங்கு வந்து அமர்ந்திருப்பர். பர்தாவை இங்கிலாந்தில் விட்டுவிட்டு வந்த பிறகு உவாக்கர் மட்டும் அப்பூந்தோட்டத்திற்கு வருவார். குழந்தைகள் அம்மா எங்கே, எப்போ வருவாங்க என்ற ஓயாத கேள்விகளுக்கு பதில் சொல்ல முடியாமல்.... சோகத்தை விழுங்கியபடி, புன்னகையைத் தவழவிட்டு, இன்னும் அதிகமாக தனது கால்களை ஊஞ்சலாட்டி அதன் மகிழ்ச்சியை அதிகரித்து குழந்தைகளை சமாளிப்பார். கதைகளையும் பாடல்களையும் சொல்லி சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்து மகிழ்வார். அவர்களோடு ஏமியும் குழந்தைகளைப் பராமரிக்கும் அக்காமார்களும் வந்தமர்ந்திருப்பர்.

இன்று, சமயப் பணிகளுக்காக ஆந்திர மாநிலத்தில் உள்ள மசூலிப்பட்டணத்திற்கு செல்ல வேண்டிய விசயத்தை சொல்லி அதைப் பற்றின விசயங்களை பேசிக் கொண்டிருந்த போது அதைக் கவனித்துக் கொண்டிருந்த சிறுமிகள் தான் இப்படி அவரை சுற்றி நின்று....

நானும் வருவேன், நானும் வருவேன்.... என்று



மொய்த்தனர். மேமா போக வேண்டாம்.... என்று தடுத்தாள்... நீ போனா உடனே வர மாட்டாய். தெரியும் எனக்கு என்றவள் தனது பிஞ்சு கைகளால் கண்களை கசக்கி அழ தொடங்கினாள்.

யார் சொன்னது.? பத்து நாள் தான். உடனே வந்து விடுவேன். அடுத்த ஞாயிருமட்டும் தான் அங்கு இருப்பேன். உடனே கிளம்பி வந்து விடுவேன்மா.. என்றார், அன்பு ததும்ப அவள் தலையை தடவி விட்டபடி. இல்ல... இல்ல... நீ அம்மாவை கூட்டிட்டு போனப்ப... எவ்..ளோ... காலம் கழிச்சி வந்தீங்க...! நாங்கல்லாம் பூந்தோட்டத்துக்கு வராமலே இருந்தோம். என்னைக்காவது தான் வருவோம். ஜெயாக்கா தான் கதை சொல்வா. ஆனா, ஊஞ்சல் ஆட விட மாட்டா.

ஏன்... ஏனாம்? என்றார் மழலை மொழியில் உவாக்கர். ஆடினா,அவள் கால் ஒடஞ்சிடுமாம் என்றாள் மல்லி.

ஓ...... உங்க ஏமியம்மா காலில் ஆடியிருக்கலாமே என்றார் புன்னகையை அடக்கியபடி கேலியாக! ஆமா.... சும்மா இருங்கள் அண்ணன். இவர்கள் எல்லாருக்கும் என் கால்கள் தாங்காது. இந்தப் பத்து நாட்களும் என்னை பாடா படுத்திருவாளுக.... என்ற ஏமியின் புன்சிரிப்பில் அந்தப்

பூந்தோட்டமே காற்றோடு அசைந்தாடி சிரித்து முடித்தது.

சரி, நான் வரும்போது குட்டிப் பிள்ளைகளுக்கு என்ன வாங்கி வருவது சொல்லுங்க பார்க்கலாம் என்று, குழந்தைகளின் அன்பான அனுமதியை பெருவதிலேயே கவனமாக இருந்தார் உவாக்கர்.

எனக்கு....முட்டாய்...முட்டாய்.... என்று எழுந்து ஓடி வந்தாள் இரண்டு வயது சிறுமி வசந்தி. இவள் கால் சற்று தாங்கி சரிந்து நடப்பாள். வார்த்தைகள் தெளிவாக வராது. அவளை உவாக்கருக்கு அதிகம் பிடிக்கும். பர்தாவும் அவள் மீது அதிக பாசம் காட்டி வந்தார். சரி, உனக்கு நிறைய வாங்கி வருவேன் சரியா என்று அணைத்து முத்தமிட்டார். விரல் சூப்பும் பழக்கமுள்ள அவளது விரலை உவாக்கர் அடிக்கடி வாயிலிருந்து எடுத்து விடுவார். எனக்கு இவர்கள் தான் குழந்தைகள் உனக்கு தெரியும்... சற்று தாழ்ந்த குரலில் ஏமியை பார்த்தபடியே கூறினார். எனக்கும் தானே அண்ணன் என்ற ஏமி, என்ன சொல்ல வருகிறீர்கள் என்று அவரது கண்களை உற்று பார்த்தாள். குழந்தைகளின் பாதுகாப்பு மிகவும் முக்கியம்.எனவே நாம் விரைவாக இந்த இடத்தைச் சுற்றி சுற்றுச்சுவர் அமைத்தாக வேண்டும் ஏமி.

ஆம்... சரிதான் அண்ணன், அதற்காக ஜெபித்துக் கொண்டே இருக்கிறேன். குழந்தைகள் வளர்ந்து வருகிறார்கள். அதற்கான நேரம் இதுதான். மசூலியிலிருந்து நீங்கள் வந்தவுடன் முதல் வேலையாக அதை செய்து விடலாம். ஆனால், அதற்கான தேவைகள் தான்.... என்ற ஏமியை இடைமறித்த உவாக்கர், இதுவரை நடத்திய நம் தேவன் இனியும் குறைவின்றி நடத்துவார். நாம் கவலைப்பட வேண்டியதில்லை என்றார்.



குழந்தைகளோடு விளையாடும் நேரம் முடியவும், சரி மணி 6 ஆக போகிறது. நான் பிரிப்பராண்டி பள்ளி மாணவர்களை சந்தித்தாக வேண்டும்... கிளம்பலாம் என்று எழுந்தார்.

ஆந்திர மாநிலத்திலிருந்த மசூலி பட்டணத்தில் சமயப் பரப்புரை நிகழ்ச்சி மிகவும் பிரபலமானது. அதில் உவாக்கர் பிரசங்க உரை நிகழ்த்த வரப்போகிறார் என்ற செய்தி அந்தப் பகுதி முழுவதும் பரவியது. அவரது சமயப் பிரசங்கத்தைக் கேட்க அந்த நாட்களில் ஆயிரக்கணக்கான மக்கள் நாட்கணக்கில் காத்துக் கிடப்பர். திருவித்தாங்கூரில் உள்ள மாரமன் கன்வென்சன் அதைவிட மிகவும் புகழ்பெற்றது. அன்றைய பிரசித்திப் பெற்ற கிறிஸ்தவ சமயப் பிரசங்கிமார்கள் பல மாநிலங்களிலிருந்து அதில் உரையாற்ற அழைக்கப்படுவர். அவர்களுள் உவாக்கர் முதன்மையானவர். தமிழில் பாண்டித்துவம் பெற்றிருந்த உவாக்கர் எவரையும் கவரும் பேச்சாற்றல் மிக்கவர். மதபேதமற்று அனைவரும் இவரது பேச்சில் மனம் இலயித்திருக்கின்றனர்.

1901 ஆம் ஆண்டு திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள டக்கரம்மாள்புரத்தில் முதல் அத்தியட்சாதீன ஆவிக்குரிய கன்வென்ஷன் கூட்டத்தை எஸ். ஜி. மதுரம் அவர்களின் தலைமையில் உவாக்கர் நடத்தினார். இக்கூட்டங்களின் எதிரொலியாக இந்திய இளைஞர்கள் பலர் சமயப்பணிக்கு பேரார்வம் காட்டி முன்வந்தனர். இதனால் சுவிசேஷ இயக்கம் என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தினார். நாளடைவில் இந்த அமைப்பின் வளர்ச்சியே இந்திய மிஷனெரி சங்கம் (ஜ.மி.ச)என்ற பெரிய மிஷனெரி சங்கமாக வளர்ச்சிப் பெற்றது.

1903 இல் இந்திய மிஷனெரி சங்கம் என்ற மிகப்பெரிய மிஷனெரி இயக்கம் ஆரம்பிப்பதற்கு உவாக்கரின் இம்முயற்சியே மூலக்காரணம். எனவே அவரது சமயப்பிரச்சாரக் கூட்டம் எங்கு நடந்தாலும் அங்கெல்லாம் கிறிஸ்தவ சமயப் பேரெழுச்சி மக்களிடையே ஏற்படும். மசூலிப்பட்டணம் உவாக்கரின் வருகைக்காகக் காத்திருந்தது. அன்றைய காலகட்டத்தில் காலரா என்ற விசபேதி இந்தியா முழுவதும் பெரும் அச்சத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. மசூலியிலும் இந்நோய் கோரத்தாண்டவமாடிக் கொண்டிருந்தது. இருந்தும் சமயப்பணியின் தாகம் அவரை அதை ஒரு பொருட்டாக எண்ண விடவில்லை. மசூலிக்கு செல்வதில் உறுதியாக இருந்தார்.

அன்று இரவு பிரிப்பராண்டி பள்ளியில் மாணவர்களைச் சந்தித்து பரலோக வாசல் திறந்திருக்கிறது; ஆயத்தமாக வேண்டும் என்ற அன்றைய பாடத்தை எடுத்து முடித்த உவாக்கர் தனது மசூலிப்பட்டணத்து பிரயாண விசயங்களையும் அவர்களோடு பகிர்ந்து கொண்டார்.

அந்த இரவின் முகப்பு வேளையில் மெல்லிய தென்றல் வீசிக் கொண்டிருந்தது. ஆகாயம் நட்சத்திர ஓட்டைகளோடு

டோனாவூரை உள்ளடக்கி குடைபோல் கவிழ்ந்திருக்க உவாக்கர் தனிமையாக ஆலய வளாகத்தில் கைகளைப் பின்புறம் கட்டியபடி அமைதியாக சுற்றிலும் பார்வையைப் படர விட்டு நடந்து கொண்டிருந்தார். ஆனால் ஏதோ ஓர் அசதி அவரில் இருந்ததை ஏமியால் உணரமுடிந்தது. ஆலயத்திற்குள் இருந்து வெளியில் வந்து கொண்டிருந்த ஏமியை உவாக்கர் கவனிக்கவில்லை. குழந்தைகளுக்காக கட்டப்பட்டிருந்த சிறு சிறு குடில்கள் அந்த மங்கிய இருளில் லாந்தர் விளக்குகளின் ஒளியால் பிகாசித்துக் கொண்டிருந்த அழகை கண்டு முகத்தில் புன்னகையோடு ஆழ்ந்து இரசித்தபடி நின்றிருந்தார். பிறகு அங்கிருந்து தனது பார்வையை ஆலயத்தை நோக்கி எதார்த்தமாகத் திருப்பினார். வாசலில் ஏமி சிரித்த முகத்தோடு உவாக்கரின் இரசனையைப் பார்த்தபடி நின்றிருந்தார்.

அவருக்கு எதிராக நடந்து வந்து கொண்டே, அண்ணன்... என்ன இன்று முதல் முறையாக எல்லாவற்றையும் பார்ப்பதைப் போல் இப்படி இரசித்துப் பார்த்துக் கொண்டே நிற்கிறீர்கள். நான் முன்பிருந்தே இங்குதான் நிற்கிறேன் தெரியுமா...!?

என்னவென்றே தெரியல ஒரு புதுவித உணர்வுமா எனக்குள் இன்று. ஏதோ ஒரு மன நிறைவும் அமைதியும் எனக்குள் கடவுள் வைத்திருக்கிறார். அந்த அமைதியை... சமாதானத்தை என்னால் விவரிக்கவே முடியவில்லை...!

அதோ பாரேன் நமது குழந்தைகளுக்கான குட்டிக் குட்டி வீடுகளை. அதிலும் பிஞ்சு குழந்தைகளுக்கான நர்சரி வெகு அழகு. ஆ... ஹா... அற்புதம். கடவுள் நம்மை நடத்தி வந்திருக்கும் விதம் அற்புதம் என்றவர் ஏமியை ஒரு குழந்தையைப் பார்ப்பதை போல் பார்த்து பெருமித்ததோடு அவரது தலையில் தட்டிக் கொடுத்தார். அந்தத்தட்டுதல் ஏமியின் இதயத்தை இலகுவாக்கி ஓர் அன்னையின் ஸ்பரிசத்தை உணரச் செய்தது.

அண்ணன், பர்தாவின் பிரிவு உங்களை நிரப்பி இருப்பதையும் என்னால் உணர முடிகிறது. மசூலியிலிருந்து வந்ததும் மீண்டும் இங்கிலாந்திற்கு புறப்பட்டாக வேண்டும் தாங்கள். முடிந்தால் பர்தாவை உடன் அழைத்து வாருங்கள்.

அதெல்லாம் இல்லையம்மா. அவளது கடிதம் சென்ற வாரம்தான் வந்தது. நானும் பதில் எழுதி அனுப்பியிருக்கிறேன். எப்போதும் அவள், நினைவிலும் கனவிலும் என்னோடுதான் இருக்கிறாள். நீ சொன்னதை போல விரைவில் அவளைப் பார்க்க செல்வேன். சரிமா நாளை அதிகாலையே நான் கிளம்பியாக வேண்டும். இதுவரை காத்த நம் எல்லாம் வல்ல தேவ கிருபை நம்மோடு இருக்கும். நீ சென்று செபித்து விட்டு தூங்க செல்... சாப்பிட்டு விட்டாயா என்றார் .

இனிமேல் தான் அண்ணன். உங்களுக்கு உணவு அனுப்பி வைத்தேனே. சாப்பிட்டு விட்டீர்களா...? இனிமேல் தான். இன்று பசியை குறைவாக உணர்ந்தேன். இப்போதுதான் பசித் தெரிகிறது சாப்பிடதான் செல்கிறேன் என்றவர் விடைபெற்றுக் கொண்டார்.

மசூலியில் உவாக்கருக்கான பரலோக வாசல் திறந்திருந்தது...!!

**தொடரும்.**


கிறிஸ்தவ **வரலாற்றுச் சுவடுகள்**

**மாத ஆய்விதழ் சந்தா விபரம்**

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

**வங்கி விபரம்**

Name: Tinnevelly Christian Historical Society

A/c Number : 1748 020000 3684

Bank name : Federal Bank

IFSC code: FDRL0001748

"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்"

மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள

G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற எண்ணுக்கு செலுத்தவும்

காசோலை மற்றும் வரைவோலை செலுத்த

'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்'

( Tinnevelly Christian Historical Society )

என்ற பெயரில் எடுக்கவும்



**ஆசிரியர்**

**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**

**கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,**

**பங்களாச் சுரண்டை-627859,**

**தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)**

**04633 290401, 91767 80001**

christianhistoricalsociety.in

tchsportal.co.in

christianhistorical@gmail.com

# சாட்சியாபுரம் எல்வின் நிலையம் வரலாறு

## மனவளர்ச்சி குறைவுடையோர் பள்ளி & செவித்திறன் குறைவுடையோர் பள்ளி

Rev. G. P. **இராஜா,**

**பழனி நகர் குருசேகரம்**

**எல்வின் அம்மையாரின் இளமைப் பருவம் :**

இங்கிலாந்து தேசத்தில் 26.02.1866 -ல் அருள்திரு. எல்வின் என்பவரின் மகளாக அவதரித்தார் ஆலிஸ் எல்வின். இயற்கையாக அழகுள்ளவர், வளர்த்தியானவர், ஞானமும், தைரியமும் உள்ளவர். இவர் பெருந்தன்மையுடையவர், ஆதரவு உள்ளம் கொண்டவர், மிகவும் கண்டிப்பானவர், ஆதரவற்ற பெண்களை மிகவும் நேசிப்பவர். இங்கிலாந்து அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்படுகிறது.

**தகப்பனாரின் சவால்**

ஆயரான இவருடைய தகப்பனார் இந்திய பெண்கள் படிப்பறிவில்லாதவர்களாய், சுயாதீனமற்றவர்களாய் வாழும், இந்திய தேசத்திலே பெண்கள் மத்தியில் பணிச்செய்ய ஆட்கள் தேவை என்பதைப் பற்றி ஆலய ஆராதனையில் கூறிய பொழுது மிஷனரிப் பணிக்காக தன்னை அர்ப்பணித்தார்கள். சென்னை வந்தடைந்த அவர்கள் திருநெல்வேலி சென்று தமிழ் மொழியைக் கற்றார் பின் சாட்சியாபுரம் வந்தார்.

**இந்தியா வருகை:**

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் எல்வின் அம்மையார் அவர்கள் தன்னுடைய இளம் வயதில் இந்தியாவின் மீது அதிகமான ஆத்துமா பாரத்தினால் தமிழ்நாட்டிலுள்ள சிவகாசி பட்டணத்திற்க அருகிலுள்ள சாட்சியாபுரம் வந்தார்கள். இந்தியாவில் பல பெண்கள் அடிமைகளாக சுதந்திரம் இல்லாமல் வாழ்ந்த அந்த நாட்களில், பெண்கள் மட்டுமே இந்திய தேசத்து பெண்கள் மத்தியில் பணி செய்யமுடியும் என்ற கருத்து மேலோங்கி நின்றது. இதை உணர்ந்த இங்கிலாந்து தேசத்தைச் சேர்ந்த ஆங்கிலிக்கன் திருச்சபை CMS மிஷனரி சங்கத்தினர் மூலம் இந்தியாவிற்கு பெண் மிஷனரிகளை அனுப்பத் தீர்மானித்தனர். CMS -ன் இந்த பெண்கள் பிரிவு தான் ZANANA MISSION என்று அழைக்கப்பட்டது. இந்த அமைப்பின் மூலம் தான் திருமணமாகாத பெண்கள் இந்தியாவிற்கு அனுப்பப்பட்டார்கள். இந்த நிறுவனத்தின் மூலம் கனம் ஆலீஸ் எல்வீன் அம்மையாரால் துவங்கப்பட்ட பெண்கள் ஊழியம் 1947ஆம் ஆண்டுக்கு முன்பு ZANANA Mission and CMS என்ற இரண்டு மிஷனகளின் ஆதரவில் நடைபெற்று வந்தது. சாட்சியாபுரத்தில் தங்கி சிவகாசி, திருவில்லிப்புத்தூர், ராஜபாளையம், சாத்தூர், விருதுநகர், இவைகளை சுற்றியுள்ள கிராமங்களின் பெண்கள் மத்தியில் இயேசுவின் நற்செய்தி பணி செய்யதார்.

**சாட்சியாபுரம் பெயர் வந்த வரலாறு:**

தற்போது சாட்சியாபுரத்தில் CSI. தூய மாற்கு ஆலயம் மற்றும் CMS நடுநிலைப்பள்ளி இயங்கி வரும் இடத்தை அருள்திரு. R. R. மெடோஸ் அவர்கள் 1860 ஆம் ஆண்டு நிலத்தை வாங்கி, இங்கிலாந்தில் உள்ள அவருடைய சொந்த கிராமத்தின் பெயரான WITNESS CAMP என்ற பெயரை தமிழில் மொழியாக்கம் செய்து சாட்சியாபுரம் என்று பெயரைச்சூட்டி கிறிஸ்தவ கிராமமாக உருவாக்கினார். ஆலிஸ் எல்வின் அவர்களும் இங்குதான் தங்கி தன் ஊழியத்தை ஆரம்பித்தார்கள்.

**சாட்சியாபுரம் ஊழியம் :**

இங்கிலாந்தில் இருந்து வந்தபோது எல்வின் அம்மையார் குதிரை கொண்டு வந்தார்கள். ஊழியத்திற்குச் செல்லும்போது குதிரை வண்டி, மாட்டு வண்டி, வில் வண்டி சென்று ஊழியம் செய்தார். எல்வின் அம்மாவிற்கு வேலை செய்வதற்கு பனையடிப்பட்டியைச் சார்ந்த திருச்சபை மக்கள் அநேகர் உதவி செய்தார்கள்.

**எல்வின் நிலைய இடம் வாங்கப்பட்ட வரலாறு:**

சிறிது காலத்திற்குப் பிறகு CMS வளாகத்தின் கிழக்குப் பகுதியில், தற்பொழுது எல்வின் நிலையம் என்று அழைக்கப்படும் ஏறக்குறைய 20 ஏக்கர் நிலப்பரப்புக் கொண்ட வளாகத்தை அவர்களுடைய பொன்னையா எனும் சமையல்காரர் மூலம் ரூபாய் 300/-க்கு சிவகாசியிலிருந்த ஒருவரிடமிருந்து வாங்கி,

தான் தங்குவதற்கு வீடு, ஜெபஅறை, சமையல்காரர் அறை ஆகியவற்றைக் கட்டி அங்கிருந்து ஊழியம் செய்தார்கள். இந்த இடத்திற்கு **புதிய சாட்சியாபுரம்** என்று பெயர் சூட்டினார்.

இந்த வளாகத்தின் கிழக்குப்பகுதியில் ஒரு பாறை இருக்கிறது. மாலை நேரங்களில் தனியாகச் சென்று தினமும் அங்கு ஜெபிப்பார்கள். சுற்று வட்டார சிறுப்பிள்ளைகள் இவர்களைப் பார்க்க வருவார்கள். அவர்களை வட்டமாக உட்கார வைத்து வேதாகமத்தைக் கற்றுக் கொடுப்பார்கள்.

**எல்வின் அம்மையாரின் மூன்று வகையான ஊழியங்கள்:**

**1. கல்விப் பணி:**

ஆரம்பத்தில் தமிழ் வாசிக்க, எழுதத் தெரியாத பெண்களுக்கு தமிழ் கற்றுக் கொடுத்தார்கள். பின் CMS மூலம் 1965 ஆம் ஆண்டு புதிய சாட்சியாபுரத்தில் ஆரம்பப்பள்ளியை ஆரம்பித்தார். பல இடங்களில் பெண்களுக்கென்று கல்வி கற்றுக்கொடுக்க பள்ளிகள் உருவாக காரணமாயிருந்தார்.

**2. மருத்துவப் பணி:**

சுகவீனமானவர்களுக்கு மருந்து, மாத்திரைகள் கொடுத்து மருத்துவ உதவி செய்தார்கள். மருத்துவ வசதியில்லாத ஏழை, எளிய பெண்களுக்கு எல்வின் அம்மையார் அவர்கள் மருத்துவ பணியை செய்தார்.

**3. நற்செய்திப் பணி:**

பெண்களுக்கு நற்செய்தி அறிவித்தார்கள். திருமதி. ஸ்ரீரங்கம், திரு. தியாகராஜர் ஆகியோர் வீடுகளில் வைத்துப் பெண்களுக்குக் கூட்டங்கள் நடத்துவார்கள். பெண்கள் கடைக்குச் சென்று வருவதாக தங்கள் வீடுகளில் கூறிவிட்டு, கணவர்களுக்குத் தெரியாமல் இக்கூட்டங்களில் ஆர்வத்துடன் கலந்து கொள்வார்கள்.

வேதாகமக் கதைகள் மூலம் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றி பெண்களுக்குத் தெளிவாகக் கூறுவார். விலங்குகள், பறவைகளின் பறவைகளின் இரத்தத்தினாலோ, நம்மை நாமே வருத்திக் கொள்வதினாலோ, தான தர்மங்கள் செய்வதாலோ நம்முடைய பாவங்கள் மன்னிக்கப்படாது. கல்வாரியில் இயேசு சிந்திய இரத்தத்தின் மூலமே பாவமன்னிப்பு. அவர் நமக்காக பாடுபட்டு, மரித்து அடக்கம் பண்ணப்பட்டு மூன்றாம் நாள் அவர் சொன்னபடியே உயிர்த்தெழுந்து இன்றும் ஜீவிக்கிறார். தன்னிடம் வருகிற எந்த பாவியையும் அவர் புறம்பே தள்ளுவதில்லை. ஆண்டவரே நான் பாவி, என் பாவங்களை மன்னியுங்க எனக்குள்ள வாசம் பண்ணுங்கள் என்று அழைக்கும் ஒவ்வொருவருடைய பாவத்தையும் மன்னித்து அவர்களுக்கு சந்தோசத்தையும், சமாதானத்தையும் மரித்தபின் மோட்சம் செல்வோம் என்ற நிச்சயத்தையும் கொடுப்பார் என்பதை போதித்தார்.

**அந்தரங்க கிறிஸ்தவர்கள்:**

சில நேரம் காலையில் கணவனமார் வேலைக்குச் சென்ற பிறகு, தனியாக வீடுகளில் இருக்கும் பெண்களைச் சந்தித்து இயேசுவைப் பற்றி கூறுவார்கள். இவர்களுடைய நற்செய்திப் பணியின் மூலம் பல பெண்கள் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டார்கள். ஆகவே இன்றும் பல குடும்பங்களில் பெண்கள் மட்டும் கிறிஸ்தவர்களாக இருக்கிறார்கள். இவர்களில் பலருக்கு வெளிப்படையாக வேதாகமம் வாசிப்பதற்கோ, ஆலயம் செல்வதற்கோ அனுமதி மறுக்கப்பட்டது. இவர்களையே அந்தரங்க கிறிஸ்தவர்கள் என்று அழைக்கின்றார்கள்.

எல்வின் அம்மா காலம் மக்கள் கிறிஸ்தவர்ளைக் கொடுமைப்படுத்திய காலம். கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளும் தாய்மார்கள் குடும்பத்தினரால் துன்புறுத்தப்படுவார்கள்.

**அடைக்கலப் பட்டணம்:**

எல்வின் அம்மையார் ஊழியம் செய்த காலத்தில் கிறிஸ்தவர்களைக் கொடுமை செய்த காலம். கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளும் தாய்மார்களுக்கெல்லாம் அடிதான் விழும். சிவகாசியில் ஸ்ரீரங்கம் அம்மா வீட்டில் எல்வின் அம்மா இரகசியமாக கூட்டம் நடத்துவார்கள். கணவன்மார்களுக்குத் தெரியாமல் வீட்டில் பொய் சொல்லிவிட்டு கூட்டங்களுக்கு வந்து விடுவார்கள். சில கணவன்மார்கள் கண்ணில் அகப்பட்டால் பெண்களுக்கு கொடுமை அதிகம். வீட்டு கணவர்களுக்கு தெரியாமல் எல்வின் அம்மா நடத்தும் கூட்டத்தில் கலந்துக்கொண்டு அடைக்கலம் புகுவார்கள்.

சிவகாசியைச் சேர்ந்த விசாலாட்சி என்ற அம்மாவுக்கு திருமணமாகி வெகுகாலமாக குழந்தை இல்லை. வசதியான குடும்பம், இவர்களுக்கு இயேசுவைப் பற்றி அறிய ஆசை. எல்வின் அம்மா மூலம் இயேசுவை ஏற்றுக் கொண்டார்கள் என்ற விபரம் கணவனுக்குத் தெரிந்துவிட்டது. தன் மனைவியை கேவலப்படுத்த நினைத்த கணவர் தன் சிநேகிதர்களிடம் ஆலோசனை செய்தார். அதன்படி ஒருவன் ஓட்டைப் பிரித்து வீட்டிற்குள் இறங்கி, காது வளர்த்து நகை அணிந்திருந்த விசாலாட்சி அம்மாவின் காதை அறுத்துச் சென்று விட்டான். விசாலாட்சி அம்மா கூச்சலிட்டார்கள். ஆனால் கணவர் தூங்குவதுபோல நடித்துவிட்டார். தன்னைக் கேவலப்படுத்தவே தன் கணவர் திட்டமிட்டு இப்படிச் செய்துள்ளார் என்பதைப் புரிந்து கொண்ட இவர்கள் பொழுது விடிந்தவுடன் எல்வின் அம்மாவிடம் போய்ச் சேர்ந்து விட்டார்கள். பல முயற்சிகளுக்குப் பின்னர், ஆறு மாதங்கள் கடந்த நிலையில் அவர்கள் கணவர் எல்வின் அம்மாவிடம் நடந்த நிகழ்விற்கு மன்னிப்புக் கேட்டுத் தன் மனைவியை அழைத்துச் சென்றார். இவ்வாறு பல பெண்களுக்கு ஒரு அடைக்கலப் பட்டணமாக எல்வின் நிலையம் இருந்துள்ளது.

**26-ம் தேதி ஜெபம்:**

எல்வின் அம்மா பிறந்த நாளில் ஒவ்வொரு மாதமும் எல்வின் மையத்தில் 26-ம் தேதி ஜெபம் நடைபெறும். எல்வின் அம்மா காலத்தில் சிவகாசியிலிருந்து பல பெண்கள் இந்த ஜெபக்கூட்டத்தில் கலந்து கொள்வார்கள். எல்வின் அம்மாவால் ஆரம்பிக்கப்பட்ட இந்த ஜெபக் கூடுகை தொடர்ந்து செல்வி. செல்வராஜ், செல்வி. ஹெப்சி பாலையா ஆகியோரால் நடத்தப்பட்டது. இக்கூட்டம் இன்று வரை இரண்டு பள்ளிகளும் கலந்து கொண்டு வருகின்றார்கள்.

**ஆரம்பகால நன்கொடை உதவியவர்கள் :**

சாட்சியாபுரத்தில் தங்கி எல்வின் அம்மா அவர்கள் Rev. R. R. மெடோஸ் ஐயருக்கு பிறகு ஊழியத்தை பெண்கள் மத்தியில் செய்தார். இதற்கு உதவியாகயிருந்தவர்கள் சாட்சியாபுரம் தூய மாற்கு ஆலயம் மற்றும் மற்றும் சிவகாசி இராக்லாந்து ஞாபகர்த்த ஆலயத்தின் திருச்சபை மக்கள் உற்சாகமாக நன்கொடை வழங்கி ஊழியத்தை தாங்கினார்கள். '

**கொடைக்கானல் :**

எல்வின் அம்மா அவர்களுக்கு கொடைக்கானலில் ஒரு பங்களா உண்டு. விடுமுறை நாட்களில் அங்கு சென்று ஓய்வு எடுப்பார்கள். குறிப்பாக ஏப்ரல், மே மாதங்களில் எல்வின் அம்மா அவர்கள் அங்குயிருப்பார்கள்.

**வேதாகமப் பெண்கள்:**

தென்னிந்திய திருச்சபை உருவான காலத்தில் (1947) எல்வின் அம்மையார், டிக்கின்சன், லில்லி ஹவர்த், மார்ஜரி ஸ்மித் என்ற பெண்கள் ஊழியர்களால் அநேக பெண்கள் இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்ள அதிகமாக உழைத்தார். கிறிஸ்தவர்கள் மற்றும் பிற நம்பிக்கையுள்ள மக்களை ஒன்றிணைத்து வேதாகமப்பள்ளி ஒன்றை ஆரம்பித்து ஆராம்பித்து வேதாகமத்தை கற்றுக்கொடுத்தார். கற்றுக்கொண்ட பெண்கள் வேதாகம பெண்களாக மாறினார்கள். வேதாகமப் பெண்களுக்கு நல்ல பயிற்சி கொடுக்கப்பட்டது. வேதாம போதனை மற்றும் மாற்று சிறு தொழில்கள் செய்ய கற்றுக்கொடுக்கப்பட்டது.

இயேசுவை ஏற்றுக் கொண்டு இவர்களிடம் அடைக்கலம் புகும் பெண்களுக்கு ஆறுமாத காலம் வேதபாடங்களைக் கற்றுக் கொடுப்பார்கள், பின் அவர்கள் திருவில்லிப்புத்தூர், இராஜபாளையம், சாத்தூர், ஏழாயிரம்பண்ணை ஆகிய ஊர்களில் ஊழியம் செய்ய அனுப்புவார்கள். சிவகாசி பெண்கள் பலர் இயேசுவை அறிந்து கொள்ளவும், ஆதரவற்ற பெண்களுக்கு வாழ்வு கொடுக்கவும், பல வேதாகமப் பெண்களை உருவாக்கிடவும் தேவனால் பயன்படுத்தப்பட்டவர் எல்வின் அம்மா என்று சொன்னால் இவருக்கே அதை பொருத்தமாக காணப்படும்.

**எல்வின் அம்மாவின் தங்கை ஊழியம் :**

எல்வின் அம்மாவின் தங்கை ஜேன் எல்வின் இவருக்கு உதவியாக இந்த வளாகத்தில் பல ஆண்டுகள் தங்கி ஊழியம் செய்திருக்கிறார்கள். இவர்களைப் பெண்கள் 'சின்னமா' என அன்புடன் அழைப்பார்கள். எல்வின் அம்மா வீட்டிற்குப் பின் இவர்கள் வீடு அமைந்திருந்தது. இவர்கள் சில ஆண்டுகளுக்குப் பிறகு இங்கிலாந்து தேசத்திற்கே சென்றுவிட்டார்கள்.

**எல்வின் அம்மாவின் மரணம் :**

எல்வின் அம்மா, வயது முதிர்வின் காரணமாக தனது 95 ஆம் வயதில் 17. 12. 1961 அன்று தாங்கள் வாழ்ந்த இல்லத்திலேயே கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள். இவருடைய உடல் சாட்சியாபுரம் தூய. மாற்கு ஆலய கல்லறைத் தோட்டத்தில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது. இவருக்கு மிகவும் பிரியமான வார்த்தை **'மெய் சமாதானம்'** என்பது, இவ்வார்த்தை இவர்களது கல்லறையில் பொறிக்கப்பட்டுள்ளது.

**ஸ்மித், ஹவாத் அம்மையார்கள்:**

இவர்களும் CMS மிஷனரி ஸ்தாபனத்தின் பெண்கள் பிரிவான ZANANA மிஷன் மூலம் இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்கு அனுப்பப்பட்டவர்கள். திருநெல்வேலியில் தங்கி தமிழ் மொழியை பேசவும், எழுதவும் கற்றுக் கொண்டார்கள். 1949-ம் ஆண்டு சிவகாசிக்கு வந்தார்கள்.

சிவகாசியில் செயல்பட்டுவரும் ஞானபாக்கியம் பள்ளியின் பொறுப்பாளர்களாக இருந்து சிறப்பாக கல்விப்பணி ஆற்றினார்கள். ஞானபாக்கியம் பள்ளி இவர்கள் காலத்தில் சிறப்பாக சிறந்து விளங்கியது. சிறந்த பள்ளியென பெயர் பெற்றதால் பல பெற்றோர் விருப்பத்துடன் இப்பள்ளியில் சேர்த்தனர். இவர்கள் காலத்தில் சுமார் 200 பிள்ளைகள் படித்தனர். ஐந்தாம் வகுப்பு முடிக்கும் பிள்ளைகளுக்கு வேதபுத்தகம் பரிசாக கொடுப்பார்கள்.

சிவகாசி மக்கள் மத்தியிலும், கிராம மக்கள் மத்தியிலும் ஊழியம் செய்தனர். ஆரம்பத்தில் இருவரும் சைக்கிளில் சென்று ஊழியம் செய்தனர். பின்னர் ஒரு கார் வாங்கினார்கள். அதில் **'சாட்சி வாகனம்'** என்று எழுதப்பட்டிருந்தது. இவர்களை ஏற்றுக்கொள்ளும் வீடுகளில் இயேசுவின் அன்பைக் குறித்து சொல்வார்கள். அவர்கள் கற்றுக் கொடுத்த வசனங்களையும், கதைகளையும் சொல்லுபவர்களை முதுகில் தட்டிக்கொடுத்துப் பாராட்டி மகிழ்ச்சியடையச் செய்வார்கள். ஆதரவற்ற பிள்ளைகளை வளர்த்து, படிக்கவைத்து, திருமணம் செய்து வைத்திருக்கிறார்கள்.

இவர்கள் கல்விப் பணியும், ஆத்தும ஆதாயப் பணியும் செய்து, அநேகரை கிறிஸ்துவுக்காக ஆதாயப்படுத்தினார்கள். எல்வின் அம்மா மறைவிற்கு பிறகு, இவர்கள் 1964-ல் இருவரும் இங்கிலாந்து தேசத்திற்கு சென்று விட்டார்கள். 4 இவர்களுக்கு பின்பு 1965ஆம் ஆண்டு முதல் கிரேஸ் செல்வராஜ் அம்மையார் அவர்கள் பொறுப்பெடுத்து நடத்தினார்கள். இவர் நம் நாட்டைச்சார்ந்தவர். 11 ஆம் வகுப்பு வரை படித்து தேர்ச்சி பெறாத பெண்களுக்கும், வசதியற்ற பெண்களுக்கும் கைத்தொழில் பயிற்சி கற்றுக்கொடுக்கப்பட்டது. இதன் மூலம் பல பெண்கள் பயன்பெற்று தன் வாழ்வை உயர்த்திக்கொண்டார். குறிப்பாக ஆர்வமிக்க பெண்களுக்கு வேதாகம பயிற்சி கொடுக்கப்பட்டது. வேதாகம பயிற்சிகள் கொடுக்கப்பட்டு 30பெண்கள் படித்து வெளியேறினார்கள். கடைசியாக தையல் வகுப்பும் நடத்தி பரீட்சைக்கு இரண்டுபேர் ட்ரெஸ்மேக்கிங்-எம்ராய்டரி அரசு தேர்வு எழுதி ஒருவர் இரண்டிலும் தேர்ச்சி பெற்று சான்றிதழ் பெற்றனர். மூன்று குடும்பங்களும் ஒரு டாக்டர் அம்மாளும் நிலையத்தில் ஞானஸ்நானம் பெற்று கர்த்தருடைய மந்தையில் சேர்ந்தார்கள்.

## எல்வின் நிலையம்
## (மனவளர்ச்சி குறைவுடையோர் பள்ளி)

**வரலாற்று பின்னணியம் :**

1960 ஆண்டு திருநெல்வேலி, பாளையங்கோட்டை செவித்திறன் குறையுடையோர் பாடசாலையின் முதல்வராயிருந்த **திரு. சிட்டன்டன்** அவர்கள் மற்ற திருமண்டிலங்களுக்கு சவால் நிறைந்த அறைகூவலை விட்டார், மாற்று திறனாளிக்கென்று

சிறப்பான பணியை செய்ய முன்வரும்படி அழைத்தார். உடனே மதுரை-இராமநாதபுரம் பேராயர் Rt.Rev.ஜார்ஜ் தேவதாஸ் அவர்கள் பதில் கொடுத்தார். 01.06.1961 அன்று CSI. செவிடர் பாடசாலையை Rt.Rev. ஜார்ஜ் தேவதாஸ் (1959 - 1978) அவர்களால் தொடங்கப்பட்டது. இவரே அப்பள்ளியின் தாளாளராகயிருந்தார். இரண்டாவதாக பொறுப்பேற்ற அருள்திரு. தவராஜ் டேவிட் அவர்கள் சாட்சியாபுரத்தில் காதுகேளாத பிள்ளைகளுக்கும் மற்றும் மன வளர்ச்சி குறைவுடையோர் பிள்ளைகளுக்கும் பள்ளி ஆரம்பிக்கத் திட்டமிட்டார்.

**பள்ளியின் தோற்றம் :**

எல்வின் மையம் காது கேட்கும் திறன் குறைவுள்ளோர் பள்ளி மற்றும் மனநல திறன் குறைவுள்ளோர் பள்ளியும் விருதுநகர் மாவட்டத்தில் முதன்முதலாக அமைக்கப்பட்ட ஒரே அமைப்பாகும். இப்பள்ளி 06.08.1980 ஆம் ஆண்டு 13 பிள்ளைகளுடன் தொடங்கப்பட்டது. '

நமது முன்னாள் பேராயர் அருட்பெருந்திரு. தவராஜ் டேவிட் அவர்கள் மானாமதுரையில் போதகராகவும், தெற்கு வட்டகை மன்றத்தின் சேர்மனாகவும் இருந்த நாட்களில், பேராயர் அம்மா திருமதி. டார்லிங் செல்வபாய் டேவிட் அவர்கள் போதகர் அம்மாவாகவும் பணி செய்த மானாமதுரை சி. எஸ். ஐ. செவித்திறன் குறைவுடையோர் பள்ளியில் தலைமை ஆசிரியையாகவும் பணியாற்றி வந்த நாட்கள் அது. இவர்கள் ஸ்காட்லாந்து தேசத்தில் ஊனமுற்றோருக்கு கல்வி போதிப்பதற்கான சிறப்புப் பயிற்சி பெற்றவர்கள்.

அன்று ஒரு நாள் தனது மகள் கோமதியை இளையார்குடி அருகில் உள்ள இடையவலசையில் பள்ளியில் சேர்க்க முடியாததால் மானாமதுரையில் உள்ள செவித்திறன் குறைவுடையோர் பள்ளியில் எப்படியாவது சேர்த்துக் கொள்வார்கள் என்ற பெரிய எதிர்பார்ப்போடு வந்தார் கோமதியின் அப்பா கொங்கன். கோமதியின் செயல்களில் காணப்பட்ட வித்தியாசத்தைக் கவனித்த தலைமை ஆசிரியை கோமதி செவித்திறன் குறைவுடையவள் அல்ல, மனவளர்ச்சி குறைவுடையவள் என்பதை அவருடைய அப்பாவிற்கு எடுத்துக் கூறினார்கள். கோமதி மனவளர்ச்சி குறைவுடையவள் என்று அவர்கள் கூறியது அவருக்குப் புரியவேயில்லை. கோமதியின் தகப்பனார் கண்ணீர் விட்டார். அவளை எப்படியாவது பள்ளியில் சேர்த்துக் கொள்ள மன்றாடினார். அவர் வடித்த கண்ணீரைக் கண்டு கலங்கிப் போன தலைமை ஆசிரியை வீட்டில சென்று மனவளர்ச்சி குறைவுடையோருக்கு திருமண்டிலத்தில் ஒரு பள்ளி ஆரம்பிக்க வேண்டும் என்ற தேவையை தனது கணவரிடம் கூறினார்கள். இருவரும் ஜெபித்து திருப்புவனம், வத்தலக்குண்டு ஆகிய ஊர்களில் இப்பள்ளி ஆரம்பிப்பதற்குரிய வாய்ப்புகளை ஆராய்ந்தார்கள். இறுதியாக எல்வின் மையத்தைப் பார்வையிடுவதற்காக வந்தார்கள். எல்வின் மையத்தில் எல்வின் அம்மா வழக்கமாக ஜெபிக்கும் ஒரு பாறை உண்டு அங்கு சென்று ஜெபித்து தேவனுடைய வழிநடத்துதலை திட்டமாக உணர்ந்தார்கள். அப்போதைய பேராயர் அருட்பெருந்திரு. அறிவர். D. போத்திராஜீலு அவர்களுடைய அனுமதி மற்றும் ஆலோசனையின் பேரில் 1980 -ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 6-ம் தேதி 13 பிள்ளைகளுடன் இப்பள்ளியை ஆரம்பித்த, அதே நாளில் செவித்திறன் குறைவுடையோருக்காகவும் ஒருபள்ளி இவ்வளாகத்தில் ஆரம்பிக்கப்பட்டது.

சிறப்புப் பயிற்சி பெற்ற ஆசிரியர் திரு. தேவராஜ் என்பவர் முதல் ஆசிரியராகப் பணியாற்றினார். ஆரம்ப நாட்களில் அருட்பெருந்திரு. தவராஜ் டேவிட் அவர்கள் சிவகாசியில் உள்ள திருச்சபை மக்களிடமும், மானாமதுரை, இராமநாதபுரம் ஆகிய ஊர்களில் உள்ள சி. எஸ். ஐ பள்ளிகளின் ஆசிரியர்களிடமும் நன்கொடைப் பெற்று மிகவும் பாடுபட்டு இப்பள்ளிகளையும், விடுதிகளையும் நடத்தி வந்தார்கள்.

**அருள்திரு. மா. தயாளன் பர்னபாஸ் அவர்கள் பணியின் ஆரம்பம்:**

சென்னையில் உள்ள பாலவிகார் பயிற்சிப் பள்ளியில் (D. S. E) Diplamo in Special Education முடித்து விட்டு 01. 12. 1981 அன்று தலைமை ஆசிரியராகப் பணியில் சேர்ந்தார். கர்த்தருடைய ஆசீர்வாதத்தாலும், குடும்பத்தினர், நண்பர்கள், திருச்சபை மக்கள் மற்றும் பொதுமக்கள் கொடுத்த ஆதரவினாலும் தொடர்ந்து இந்நாள்வரை இப்பள்ளியில் பணிசெய்யும் பாக்கியம் பெற்றார். இவரைத் தொடர்ந்து இவரது துணைவியார் திருமதி. சாந்தி அவர்களும் சென்னையில் சிறப்புப் பயிற்சிப் பெற்று 06. 07. 1998 அன்று சிறப்பு ஆசிரியையாக பணி நியமனம் பெற்றார்கள்.

**1.பள்ளியின் வளர்ச்சியில் அரசாங்கத்தின் பங்கு:**

1984-ம் ஆண்டு தமிழக அரசு சமூக நலத்துறை மூலம் இப்பள்ளிக்கு அங்கீகாரம் வழங்கியது. தமிழக அரசு இப்பள்ளிக்கு 1991-ம் ஆண்டு ஒரு இடைநிலை ஆசிரியர் பணியிடத்திற்கும் 1992 -ம் ஆண்டு மற்றுமொறு இடைநிலை ஆசிரியர் பணியிடமும் வழங்கியது. இதே ஆண்டில் உணவு ஊட்டுமானியம் தமிழக அரசு மூலம் இங்கு விடுதியில் தங்கி படிக்கும் மாணவ, மாணவிகளுக்கு உணவு ஊட்டுமானியம் கொடுக்கப்படுகிறது. 2002 ஆம் ஆண்டு நிரந்தர அங்கீகாரம் தமிழக அரசு மூலம் வழங்கியுள்ளது. இதே ஆண்டில் காதுகேளாதோர் மற்றும் மனவளர்ச்சி குறைவுடையோர் பள்ளிக்கென்று தனிதனியாக தமிழக அரசு அங்கீகாரம் கொடுக்கப்பட்டது.

**2. பள்ளியின் வளர்ச்சியில் சிவகாசி மக்களின் பங்கு:**

பல்வேறு சேவை நிறுவனங்கள் ஒவ்வொரு ஆண்டும் ஏதாவது ஒருவகையில் உதவி செய்து வருகின்றார்கள். லயன்ஸ் கிளப், லயன்ஸ் கிளப் ஆப் சிவகாசி காஸ்மாஸ், ரோட்டரி சங்கம், இன்னர்வீல், ஜேசீஸ், YMCA, மற்றும் லியோனி பட்டிமன்றம் 2002-ம் ஆண்டு நடத்திய பொழுது சிவகாசி லயன்ஸ் காஸ்மாஸ் குழுவினர். திருச்சபைகளின் வாலிபர்கள் நிகழ்ச்சியை நடத்த எங்களுக்கு உறுதுணையாக இருந்தார்கள்.

பள்ளியின் நலன் விரும்புவோர் (Well Wishers) இப்பள்ளியின் வளர்ச்சியில் பெரும் பங்கு வகிக்கின்றனர். பள்ளியின் முதல் கட்டிடம் ரவீந்ரா பயர் ஒர்க்ஸ் திரு. அண்ணாமலை மற்றும் அவரது மனைவி சீத்தாலட்சுமி ஞாபகார்த்தமாக 1985 -ம் ஆண்டு கட்டிக் கொடுக்கப்பட்டது.

அதைத் தொடர்ந்து கூடுதல் வகுப்பறை கட்டிடங்கள் திரு. டென்சிங், திரு. K. C. A. மாணிக்கம், திரு. பழனிச்சாமி பிரதர்ஸ், திரு. ஜான்சன் இஸ்ரேல் ஆகியோர் உதவியால் கட்டப்பட்டது. பள்ளிக்குத் தேவையான பல்நோக்கு அறை கட்டுவதற்கு திரு. S. S. சங்கரலிங்கம், திரு. ஸ்ரீராம் அசோக்கும், பெண்களுக்கான விடுதிக் கட்ட திரு. டென்சிங், திரு. ஜெயசிங், கொடைக்கானல் திருமதி. ஜேன் எட்வின், அருப்புக்கோட்டை, திருமதி. சூசன், செல்வி. சாரா, ஜெர்மனி ஆகியோர் உதவினர். தொண்டு உள்ளம் படைத்த பலர் தங்கள் பிறந்த நாள், திருமண நாள் மற்றும் பெரியவர்களின் நினைவுநாட்களில் இப்பள்ளிக்கு வந்து பிள்ளைகளுடன் உணவு உண்டு செல்கின்றனர்.

**3. பள்ளியின் வளர்ச்சியில் திருமண்டிலத்தின் பங்கு:**

அருட்பெருந்திரு. அறிவர். D. போத்திராஜீலு மற்றும் அருட்பெருந்திரு. தவராஜ் டேவிட் ஆகியோர் நேரடி ஈடுபாட்டால் பள்ளி பல வளர்ச்சிகளைப் பெற்றது. முந்தைய பேராயராகயிருந்த அருட்பெருந்திரு. அறிவர். M. ஜோசப் அவர்கள் ஊனமுற்றோர் நலனில் மிகுந்த கரிசனை உடையவர்கள். பள்ளியின் வளர்ச்சிக்கு மிகவும் உறுதுணையாக இருந்தார்கள். எல்வின் மையத்தில் தாயாரிக்கப்படும் திருவிருந்திற்கான திராட்சரசத்தை தான் சாட்சியாபுரம் வட்டகை மன்றத்திலுள்ள அனைத்து ஆலயங்களிலும் பயன்படுத்த வேண்டும் என்ற கட்டளையை பிறப்பித்து, எமது தொழிற்பயிற்சி மையத்தின் வளர்ச்சிக்கு உதவியதை நன்றியுடன் நினைவு கூறுகிறோம். தற்போதுள்ள பேராயர் அருட்பெருந்திரு. அறிவர். R. ஜெயசிங் பிரின்ஸ் பிரபாகரன் அவர்களும் நல்ல ஒத்துழைப்புடனும், கரிசனையுடனும் இப்பள்ளியை அழைத்துச்செல்கின்றார்கள். KNH என்ற நிறுவனம் பேராயத்தின் மூலம் உதவி செய்து வருகின்றனர். முதல் விடுதிக்கட்டிடம், சமையல் அறை உணவு அறை ஆகியவற்றையும் கட்டி கொடுத்துள்ளனர்.

**4.26-ம் தேதி ஜெபம்:**

எல்வின் அம்மாவின் பிறந்த நாளான 26-ம் தேதி ஒவ்வொரு மாதமும் இராக்லாந்து திருச்சபை பெண்கள் கூடி எல்வின் மையத்தில் நடைபெறும் பணிகளுக்காக ஜெபித்து வருகின்றார்கள். எல்வின் மையத்தின் வளர்ச்சிக்கு இதுவே காரணம்.

**5.சிறப்புக் குழந்தைகளுடன் கிறிஸ்துமஸ்:**

திரு. மங்கள தேவராஜ் முதன் முறையாக தூய பேதுரு ஆலய வாலிபர்களைக் கொண்டு 2001 -ம் ஆண்டு எல்வின் மைய சிறப்புக் குழந்தைகளோடு கிறிஸ்து பிறப்பின் மகிழ்ச்சியை கொண்டாடும் நிகழ்வை ஆரம்பித்தார். அது தொடர்ந்து நடைபெறுகிறது. இராக்லாந்து ஞாபகார்த்த ஆலய பாடகர் குழு, வாலிபர்கள் ஐக்கியம் ஞாயிறுபள்ளி அனைவரும் சேர்ந்து எல்வின் நிலைய சிறப்புக் குழந்தைகளோடு 2001-ம் ஆண்டு முதல் கிறிஸ்மஸ் மகிழ்ச்சியை ஒவ்வொரு ஆண்டும் பகிர்ந்து கொள்கின்றனர்.

**6.சிறப்புக் குழந்தைகள் ஞாயிறு:**

முதல் முறையாக இராக்லாந்து ஞாபகார்த்த ஆலயத்தில் 16. 11. 2003 அன்று அனுசரிக்கப்பட்டது. சிறப்புக் குழந்தைகள் பாடல் பாடினர், தலைமை ஆசிரியர் திரு. தயாளன் பர்னபாஸ் பள்ளி பற்றி கூறினார் நிர்வாகி திருமதி. ஜேன் எட்வின் இறைச் செய்தி வழங்கினார்கள். பிள்ளைகளின் மறுவாழ்வும் பணிக்காக காணிக்கை சேகரிக்கப்பட்டது. இன்று ஒவ்வொரு ஆண்டும் சுமார் 10 ஆலயங்களில் சிறப்புக் குழந்தைகள் ஞாயிறு ஆராதனை நடத்தப்படுகிறது.

**7.திருச்சபை வாலிபர்களின் சங்கமம் :**

பள்ளியின் வளர்ச்சிக்காக 2-2-2003 ஆம் ஆண்டு ஆண்டு திரு. லியோனி குழுவினரின் பட்டிமன்றம் நடத்தப்பட்டது. இந்நிகழ்ச்சியை சிறப்பாக நடத்த சிவகாசியிலுள்ள சிவகாசி நகர் குருசேகரம் இராக்லாந்து ஞாபகர்த்த ஆலயம், சாட்சியாபுரம் குருசேகரம் - தூய மாற்கு ஆலயம், சிவகாசி மேற்கு தூய பேதுரு ஆலயம், திருத்தங்கல்-தூய ஸ்தேவான் ஆலயம், சிவகாசி கிழக்கு-தூய மிகாவேல் சகல பரிசுத்தவான் ஆலயத்தின் சார்பாக அனைத்து வாலிபர்களும் இணைந்து நடத்த உதவி செய்தார்கள்.

**8. பள்ளி பெற்ற விருதுகள்:**

இப்பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு. மா. தயாளன் பர்னபாஸ் 03. 12. 1999 அன்று தமிழக அரசின் நல்லாசிரியர் விருதை சென்னை மேயர் திரு. M. K. ஸ்டாலின் அவர்களிடம் பெற்றார். மாநிலத்தில் சிறந்த பள்ளிக்கான விருது இப்பள்ளி 03. 12. 2004 அன்று கலைவாணர் அரங்கில் சக நலத்துறை அமைச்சர் திருமதி. விஜயலட்சுமி பழனிச்சாமி அவர்களால் பள்ளி தாளாளர் திருமதி. ஜேன் எட்வின் அவர்களுக்கும் தலைமை ஆசிரியர் திரு. தயாளன் பர்னபாஸ் அவர்களுக்கும் விருது வழங்கப்பட்டது. இப்பள்ளியில் சிறப்பு ஆசிரியராகவும், தலைமை ஆசிரியையாகவும் பணிசெய்த திருமதி. R. சாந்தி 03. 12. 2004 அன்று தமிழக அரசின் நல்லாசிரியர் விருதைப் பெற்றார். பசுமைப் பள்ளிக்கான சி. எஸ். ஐ மாமன்றத்தின் விருதை பள்ளியில் தலைமை ஆசிரியர் திரு. ஜோசப் தினகரன் அன்று பெற்றார்.

**9. சிறப்புப் பணியாளர் விடுதி:**

செந்தில் என்ற நமது பள்ளியின் முன்னாள் மாணவனை வீட்டில் பராமரிக்க முடியவில்லை என்ற அங்கலாய்ப்பில் அவனுடைய தாயார் வடித்த கண்ணீர் நிர்வாகி. திருமதி. ஜேன் எட்வின், தலைமை ஆசிரியர் திரு. தயாளன் பர்னபாஸ் ஆகியோர் உள்ளத்தைத் தொட்டது. அதன் விளைவாக அன்றைய பேராயர் அருட்பெருந்திரு. கிறிஸ்டோபர் ஆசீர் அவர்களுடைய அனுமதியின் பெயரில் 19. 06. 2006 அன்று ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்பித்தில் இவர்கள் பள்ளி வகுப்பறையில் தங்கி கொத்தனாருடன் வேலைக்குச் சென்றனர். பின் திருமதி. சாந்தி அவர்களின் தகப்பனார் திரு. A. ரெத்தினராஜ் அவர்களின் முயற்சியால் சிவகாசியில் சிறந்த நிறுவனமான சீனிவாசா பைன் ஆர்ட்ஸ் அச்சகத்தில் வேலையில் அமர்த்தப்பட்டனர். இவர்களுக்கான விடுதிக்கட்டிடம் கட்டுவதற்கு திரு. P. P. P. கல்யாணராஜன், திருமதி. ஜெகஜோதி ஆகியோர் திரு. செண்பகராஜன் அவர்கள் மூலம் உதவி செய்தனர். அந்நாட்களில் முனைவர். கிறிஸ்டோபர் துரைராஜ் அமெரிக்க தேசத்திற்கு

முதுகலை முனைவர் ஆராய்ச்சிக்காக சென்றிருந்தார். அவர் அங்குள்ள தன் நண்பர்கள் மூலம் ஒரு பெருந்தொகையை நன்கொடையாகப் பெற்று அனுப்பினார். அதற்கான பாராட்டு கல்வெட்டு அந்த கட்டிடத்தில் வைக்கப்பட்டுள்ளது. இந்த விடுதிக் கட்டிடம் 02. 08. 2016 அன்று பிரதிஷ்டை செய்யப்பட்டது. '

**10. சிறப்பு ஒலிம்பிக்ஸ்ல் பெற்ற வெற்றிகள்:**

தமிழகத்தில் 1990-ல் சிறப்பு ஒலிம்பிக்ஸ் ஆரம்பமானது முதல் அனைத்துப் போட்டிகளிலும் நம் பிள்ளைகள் பங்குபெற்று, வெற்றி பெற்றுள்ளனர். 1996ஆம் ஆண்டு சீனாவில் நடைபெற்ற ஆசியா பசிபிக் விளையாட்டுப் போட்டியில் நம் பள்ளியைச் சேர்ந்த தினகரன் ஜெபக்குமார் இந்திய கால்பந்து அணியில் பங்கு பெற்று இரண்டு தங்கப்பதக்கங்களைப் பெற்று நாடு திரும்பினார். இதன் மூலம் இந்திய தேசத்திற்கும், சிவகாசிக்கும் எல்வின் நிலையத்திற்கும் புகழ் சேர்ந்துள்ளார். தற்போது திரு. P. ஜோசப் தினகரன் 29. 06. 2018 முதல் இப்பள்ளியின் தலைமை ஆசிரியராகவும், அருள்திரு. மா. தயாளன் பர்னபாஸ் 12. 07. 2018 முதல் இப்பள்ளி மற்றும் விடுதியின் நிர்வாகியாகவும் செயல்பட்டு இந்நிறுவனத்தை கடவுளின் துணையோடு முன்னேற்றப் பாதையில் நடத்தி வருகின்றார்கள்.

**11. தனி மனிதனின் சாதனை வெற்றிகள்:**

1987ஆம் ஆண்டு ராமர் என்ற சிறுவன் தனது 8வது வயதில் சாட்சியாபுரம் எல்வின் நிலையத்தில் சேர்க்கப்பட்டார். அவர் மனவளர்ச்சி குறைவு, கேட்கும் திறன் குறைவு, பார்க்கும் திறன் குறைவு மற்றும் பேசும் திறனும் குறைவாக காணப்பட்டார். இவருக்கு கற்றுக்கொடுப்பதில் ஆசிரியர்கள் மிகவும் கஷ்டப்பட்டார்கள். ஆனாலும் மனம் தளராமல் ராமருக்கு கற்றுக்கொடுத்தார்கள். அவருக்கு விளையாட்டு திறனை மேம்படுத்தினார்கள். 1991 ஆம் ஆண்டு YMCA சென்னையில் பந்து எரிதலில் வெள்ளி பதக்கம், 1993ஆம் ஆண்டு YMCA சென்னையில் கைப்பந்து குழு விளையாட்டு போட்டியில் தங்க பதக்கம், 1994 ஆம் ஆண்டு St. லூயிஸ் சென்னையில் நடந்த கால்பந்து போட்டியில் வெள்ளி பதக்கம், 1995 ஆம் ஆண்டு ஹைதராபாத் 400மீ. ஓட்டம், நீளம் தாண்டுதலில் தங்க பதக்கம் மற்றும் குண்டு எரிதலில் வெள்ளி பதக்கத்தை பெற்று இப்பள்ளியை சிறப்படைய செய்தார். FWMR டெல்லியில் நடைபெற்ற ஓவியப்போட்டியில் முதல் பரிசை பெற்றார். 1997ஆம் ஆண்டு வெற்றிகரமாக ராமர் முடித்தான். '

**12. வெள்ளி விழா கண்ட எல்வின் நிலையம் :**

06. 08. 1980 ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட இப்பள்ளி 2005 ஆம் ஆண்டு வெள்ளி விழாவை கண்டது. எந்த வசதியும் இல்லாத முறையில் தொடங்கப்பட்ட இந்தப்பள்ளி கடவுளின் பெரிதான கிருபையால் 25 ஆண்டுகளை கடந்த நல்ல வளர்ச்சியில் இயேசுகிறிஸ்துவின் இனிய நாமத்தில் நிறைவாகியுள்ளது. இந்த ஆண்டு வெள்ளி விழா ஆண்டாக கொண்டாடும் இப்பள்ளி மேலும் கர்த்தரின் பெரிய கிருபையோடு இமயமலை எப்படி இந்தியாவுக்கு புகலிடம் தருகிறது, அதை போல் மாற்று திறன் படைத்த கடவுளின் இக்குழந்தைகளுக்கு இப்பள்ளி புகலிடமாக விளங்குகின்றது. '

**சிந்தனைக்கு!**

நீங்கள் உலகமெங்கும் சென்று, சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தைப் பிரங்கியுங்கள் (மாற்கு 16:15) என்ற ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் கட்டளைக்கு அடிபணிந்து அன்று செல்வி. ஆலிஸ் எல்வின் கடல் கடந்து வந்து இந்திய தேசத்தின் தென்கோடியில் உள்ள சிவகாசி பகுதியில் நற்செய்திப் பணி செய்தார்கள். இந்நாட்களில் உள்ளது போன்ற தொலைத் தொடர்பு வசதியும், பயண வசதிகளும் இல்லாத அந்த நாட்களில் தியாகத்தோடு வாழ்ந்து கடவுள் தனக்கு கொடுத்தப் பணியை நிறைவு செய்து இந்த மண்ணிலேயே விதைக்கப்பட்டார்கள். அநேகரை நீதிக்குட்படுத்துகிறவர்கள் நட்சத்திரங்களைப் போல என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் பிரகாசிப்பார்கள் (தானியேல் 12:3) என்ற வேத வசனத்தின் படி இன்றும் பிரகாசிக்கிறார்கள்.

இன்றும் இந்திய தேசத்தில் நம்முடைய பாவங்களை மன்னிக்க நம்மை மோட்சம் சேர்க்க இந்த உலகில் பிறந்து பாடுபட்டு மரித்து அடக்கம் பண்ணப்பட்டு மூன்றாம் நாள் உயிரோடு எழுந்து இன்றும் நம்மை பாதுகாத்து வழிநடத்தி வரும் ஜீவனுள்ள கடவுளாகிய இயேசு கிறிஸ்துவை அறியாதவர்கள் பலர் இருக்கிறார்கள்.

அறிந்தவர்கள் பலர் சுயநலத்தோடு நான். . . . என் குடும்பம். . . . . . என்ற குறுகிய பாதுகாப்பு வட்டத்திற்குள்ளாக பெயர் கிறிஸ்தவர்களாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

**யாரை நான் அனுப்புவேன், யார் நமது காரியமாய்ப் போவான்** என்று உரைக்கிற ஆண்டவருடைய சத்தத்திற்கு (ஏசாயா 6: 8) கீழ்படிந்த ஏசாயாவைப் போல, ஆலிஸ் எல்வின், ஸ்மித், ஹவாத் அம்மையர்கள் போல தியாகத்தோடு அவருக்கு சாட்சியாய் வாழ, அவருக்கு சாட்சிபகர ஆட்கள் தேவை.

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்து கூறினார் **'யோவான் 4:35-ல் இதோ, வயல் நிலங்கள் இப்பொழுதே அறுப்புக்கு விளைந்திருக்கிறது உங்கள் கண்களை ஏறெடுத்துப் பாருங்கள் என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்'** என்று, கடவுளின் இந்த ஏக்கக் குரல் உங்கள் செவிகளில் தொணிக்கவே இந்த வரலாற்றுச்சுடர்.

லூக்கா 14:21. வசனத்தின்படி **'எஜமான் ஊழியக்காரனை நோக்கி: நீ பட்டணத்தின் தெருக்களிலும் வீதிகளிலும் சீக்கிரமாய்ப் போய் ஏழைகளையும், ஊனரையும், சப்பாணிகளையும், குருடரையும் இங்கே கூட்டிக் கொண்டு வா என்றார்'.** இன்று இப்பணியைச் செய்ய நாம் அழைக்கப்படுகின்றோம்.

பல்வேறு மாற்றுத்திறனுடையவர்கள் கடவுளின் இருதயத்திற்கு அருமையானவர்கள். ஆகவே தான் இயேசு கூறினார் மத்தேயு 25:40 **'மிகவும் சிறியவராகிய என் சகோதரரான இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்தீர்களோ, அதை எனக்கே செய்தீர்கள்'** என்று நூற்றுக்கணக்கான மனவளர்ச்சி குறைவுடையோர் வாழ்வு மலர அவர்களும் சுடர்களைப்போல பிரகாசிக்க வேண்டும் என்ற விருதுவாக்கோடு இன்று எல்வின் நிலையம் செயல்பட்டு வருகிறது.

ஜான் ஞானராஜ்
கல்லிடைக்குறிச்சி



# அச்சம்பட்டி திருச்சபை வரலாறு

திருநெல்வேலியில் இருந்து சுமார் 36 கிலோமீட்டர் தொலைவில் தெற்கு அச்சம்பட்டி கிராமமும் 37. 5 கிலோ மீட்டர் தொலைவில் வடக்கு அச்சம்பட்டி கிராமமும் அமைந்துள்ளது. திருநெல்வேலியில் இருந்து சங்கரன்கோவில் செல்லும் மாநில நெடுஞ்சாலையில் வன்னிக்கோனேந்தல் எனும் பெருங்கிராமம் உள்ளது. வன்னிக்கோனேந்தல் கிராமத்தில் இருந்து வடக்கு நோக்கி கழுகுமலை வழியாக கோவில்பட்டி செல்வதற்கு நெடுஞ்சாலை உள்ளது அந்த நெடுஞ்சாலையில் வன்னிக்கோனேந்தல் கிராமத்தில் இருந்து சுமார் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் தெற்கு அச்சம்பட்டி கிராமமும் 4. 5 கிலோ மீட்டர் தொலைவில் வடக்கு அச்சம்பட்டி கிராமமும் அமைந்துள்ளன.

### மக்களும் வாழ்வியலும் - அறிமுகம்

தென்மேற்கு மற்றும் வடகிழக்கு பருவக்காற்று மழையைச் சார்ந்து நடைபெறும் விவசாயத்தை சார்ந்த வயல் நிலங்கள் இந்த இரு கிராமங்களைச் சுற்றிலும் உள்ளன. இவ்விரு கிராமங்களிலும் விவசாயப்பணியே மக்களின் வாழ்வியல் ஆதாரமாக உள்ளது. தெற்கு அச்சம்பட்டி கிராமத்தில் பெருமளவில் கொண்டையன்கோட்டை மறவர் வசிக்கின்றனர். அவர்களில் சுமார் 15 குடும்பத்தினர் கிறிஸ்தவத்தை ஏற்றுள்ளார்கள். அவர்கள் ஆண்டவரைத் தொழுது கொள்ள CSI தேவாலயம் உள்ளது. தேவேந்திரகுல வேளாளர் மற்றும் அருந்ததியர் வசிக்கும் தெருக்களும் தெற்கு அச்சம்பட்டியில் உள்ளது. வடக்கு அச்சம்பட்டி கிராமத்தில் தேவேந்திரகுல வேளாளர், நாடார், மற்றும் ஆதிதிராவிடர் வசிக்கின்றனர். தேவேந்திரகுல வேளாளர்கள் முழுமையாக கிறிஸ்தவத்தை ஏற்றுள்ளார்கள். பிற சமூகத்தினரில் ஒரு சில குடும்பத்தினர் மட்டுமே கிறிஸ்தவத்தை ஏற்றுள்ளார்கள்.

### நற்செய்திப் பணியின் தொடக்கம்

சங்கரன்கோவிலில் ரேனியஸ் ஐயரவர்களால் 1837 ஆகஸ்ட் மாதத்தில் நடைபெற்ற ஆடித்தபசு திருவிழாவை ஒட்டி ஒரு வார காலம் நற்செய்தி அறிவிப்பு பணி செய்யப்பட்டது இரவு பகல் பாராது நடைபெற்ற இந்த பணியின் மூலமாக சங்கரன் கோவிலுக்கு அருகாமையில் இருந்த சுப்பலாபுரம் மேல ஆலங்குளம் கிராமங்கள் கிறிஸ்தவத்தை ஏற்றது சங்கரன்கோவிலுக்கு அருகாமையில் இருந்த பனைவடலி மற்றும் அதை சுற்றி இருந்த கிராமங்கள் இரட்சிப்புக்குள் வரவில்லை பனைவடலி சுற்று கிராம எல்லைக்குள் இருந்த கிராமங்களே தெற்கு மற்றும் வடக்கு அச்சம்பட்டி. கிராமங்கள்.

### ரேனியஸ் ஐயரவர்களின் ஊழிய காலத்திற்குப் பின் பனைவடலி வட்டாரம்

ரேனியஸ் ஐயரவர்களின் ஊழிய காலத்திற்குப் பின் CMS மிஷன் சபைகள் பல வட்டாரங்களாக பிரிக்கப்பட்ட போது பனைவடலியை தலைமை இடமாகக் கொண்டு வட்டாரம் உருவாக்கப்பட்டது. அந்த வட்டாரம் பண்ணைவிளை வட்டார மிஷனரி கனம். ஜான் தாமஸ் டக்கர் ஐயரவர்களின் மேற்பார்வையின் கீழ் வந்தது.

### வடக்கு அச்சம்பட்டியில் கிறிஸ்தவம்

கனம். ஜான் தாமஸ்டக்கர் ஐயரவர்களின் காலத்தில் நடைபெற்ற நற்செய்தி பணியின் காரணமாக வடக்கு அச்சம்பட்டி கிராமத்தில் 1852 ஆம் ஆண்டில் கூட்டமாக தேவேந்திர குல வேளாளர்கள் கிறிஸ்தவத்தை ஏற்றனர். 24.08.1852 இல் பண்ணைவிளை வட்டார மிஷனரி கனம். ஜான் தாமஸ் டக்கர் ஐயரவர்கள் வடக்கு அச்சம்பட்டிக்கு வருகை தந்த போது அன்றைய தினம் எழுதிய நாட்குறிப்பில் 130 ஆத்துமாக்கள் புதிதாக இந்த கிராமத்தில் கிறிஸ்தவத்தை ஏற்றுள்ளார்கள் என குறிப்பிட்டுள்ளார்கள். அவர்களது அந்த நாளைய மிஷனரி நாட்குறிப்பு 1853 ஆம் ஆண்டில் சர்ச் மிஷனரி ரிப்போர்ட் எனும் CMR Journal இல் வெளிவந்துள்ளது. வடக்கு அச்சம்பட்டி கிராமத்தோடு நெருங்கிய உறவு முறை தொடர்புள்ள தேவேந்திர குல வேளாளர் முழுமையாக வாழும் தடியாபுரம் கிராமமும் இதே காலக்கட்டத்தில் கிறிஸ்தவத்தை ஏற்றிருக்க வேண்டும்.

### கனம். விட்சர்ச் ஐயரவர்களின் பன்னீர்குளம் சேகர மேற்பார்வையின் கீழ் வடக்கு அச்சம்பட்டி

1855-56 இல் வடக்கு அச்சம்பட்டி கிராமத்தில் மூன்று பேருக்கு கனம். விட்சர்ச் ஐயரவர்களால் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. அந்த விபரம் 1856 CMR (Church Missionary Report) Journal இல் வெளிவந்துள்ளது. கனம். விட்சர்ச் ஐயரவர்கள் 1852 முதல் 1869 வரை பன்னீர்குளம் சேகரகுருவானவராக பணி செய்தவர் ஆவார். இதை உற்று நோக்கி பார்க்கிற பொழுது பண்ணைவிளை மிஷனரியின் கண்காணிப்பில் இருந்த வடக்கு அச்சம்பட்டி திருச்சபை 1855 இல் பன்னீர்குளம் சேகர குருவானவர் கண்காணிப்பின் கீழ் வந்துள்ளது என்பதை அறிந்து கொள்ளலாம்.

### சேகர தலைமை இடமாக வடக்கு அச்சம்பட்டி

ரேனியஸ் ஐயரவர்களின் ஊழிய காலத்திற்குப் பிறகு CMS மிஷன் சபைகள் பல வட்டாரங்களாக பிரிக்கப்பட்டபோது வட்டார தலைமையிடமாக பனைவடலி இருந்தது. 1876 இல் வடக்கு அச்சம்பட்டி பனைவடலி வட்டார தலைமை இடமாக மாறியது. அது பின்னர் அச்சம்பட்டி சேகரம் என்றழைக்கப்பட்டது. அச்சம்பட்டி சேகர குருவானவர் வடக்கு அச்சம்பட்டியில் தங்கியிருந்து சேகர (வட்டார) சபைகளை மேற்பார்வை செய்து வந்தார்.

### அச்சம்பட்டியில் தங்கி பணி செய்த முதல் குருவானவர்

அச்சம்பட்டியின் முதல் சேகர குருவானவர் ஆக கனம். நல்லதம்பி ஐயரவர்கள் செயல்பட்டார்கள். அக்காலத்தில் சபையார் வீடுகளில் குடும்ப ஜெபம் செய்யும் வழக்கம் அக்காலத்தில் தொடங்கப்பட்டது.

### சார்ஜெண்ட் பேராயர் வருகையின் போது அச்சம்பட்டி சேகர நிலை

1877 இல் சார்ஜெண்ட் பேராயர் அச்சம்பட்டிக்கு வருகை தந்தார்கள். அவரது வருகையின் போது அச்சம்பட்டி சேகரத்தில் 31 சபைகளும் 991 சபையாரும் இருந்தனர்.

### வடக்கு அச்சம்பட்டியில் தொடக்கப்பள்ளி

வடக்கு அச்சம்பட்டியில் சபை உருவான காலகட்டத்திலேயே தொடக்கப்பள்ளியும் தொடங்கப்பட்டது.

### வடக்கு அச்சம்பட்டியின் முதல் தேவாலயம்

அச்சம்பட்டியில் சபை உருவான தொடக்க காலத்தில் மேற்கூறையாக ஓடுகளைக் கொண்ட கட்டிடம் கட்டுப்பட்டு தேவாலயமாக செயல்பட்டு வந்தது வடக்கு அச்சம்பட்டியின் தேவேந்திரகுல வேளாளர் தெரு முழுவதும் கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டதால் அந்த ஓட்டு கட்டிடத்தில் அனைவரும் அமர்ந்து ஆராதிக்க இயலவில்லை ஆதலால் பெரிதானதோர் தேவாலயம் கட்டப்பட முடிவு செய்து 30. 09. 1921 தூய. மிகாவேல் சகல அதிதூதர்களின் திருநாள் அன்று நெல்லை பேராயர் மகாகனம். உவாலர் அவர்களால் புதிய தேவாலயத்திற்கான அடிக்கல் நாட்டப்பட்டது. 1927 டிசம்பரில் கட்டுமான பணிகள் தொடங்கப்பட்டது. 1929 இல் தேவாலய சுவர் மட்டம் வரை பணி வந்த நிலையில் தேவாலய கட்டுமான பணி நின்று போனது.

### கனம். தியோடர் பால் மாணிக்கம் ஐயரவர்களின் பெரும் முயற்சியால் மீண்டும் தேவாலய கட்டுமான பணி

அச்சம்பட்டி சேகர குருவானவராக கனம். தியோடர் பால் மாணிக்கம் ஐயரவர்கள் பொறுப்பேற்றார்கள் இவர்களது பணி காலத்தில் அச்சம்பட்டி சேகர சபைகள் அனைத்தும் மாபெரும் எழுப்புதலை பெற்றது. அச்சம்பட்டி சேகர சபைகளில் அநேகருக்கு அவரது பெயர் சூட்டப்பட்டிருப்பது இதற்கு சான்றாக உள்ளது. மீண்டும் அச்சம்பட்டி தேவாலய கட்டுமான பணியைத் தொடரச் செய்ய சபை மக்களிடத்தில் ஆர்வத்தை எழும்பச் செய்த கனம். தியோடர் பால் மாணிக்கம் ஐயரவர்கள் 1954 இல் தடைபட்டு நின்று போன நிலையில் இருந்த தேவாலய கட்டுமானப் பணியை மீண்டும் தொடங்கினார்கள். ஐந்தே மாதத்தில் தேவாலய கட்டுமான பணியைச் சிறப்பாக செய்து முடித்தார்கள்.

### புதிய தேவாலய பிரதிஷ்டை

சிறப்பாக பெரிதான அளவில் புதிதாக கட்டப்பட்ட தேவாலயம் 02. 04. 1955 அன்று பரி. மிகாவேல் பெயரில் நெல்லை பேராயர் மகாகனம். A. G. ஜெபராஜ் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

### பரி. மிகாவேல் குருமனை

1876 முதல் சேகர தலைமை இடமாக சேகர குருவானவர் தங்கி பணி செய்யும் இடமாக வடக்கு அச்சம்பட்டி இருந்தமையால் தொடக்க காலத்திலேயே வடக்கு அச்சம்பட்டியில் குருமனை கட்டப்பட்டது. அந்த குருமனை சிறியதாக இருந்தபடியினால் கனம். எபனேசர் தேவராஜ் ஐயரவர்கள் சேகர குருவானவராகப் பணி செய்த காலத்தில் விரிவாக்கம்

செய்யப்பட்டது. விரிவாக்கப்பட்ட பரி. மிகாவேல் குருமனை 26. 05. 1990 அன்று நெல்லை பேராயர் மகாகனம். ஜேசன் எஸ் தர்மராஜ் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

**பரி. மிகாவேல் தேவாலய கோபுரம்**

தேவாலயம் சிறப்பாக கட்டப்பட்ட நிலையில் கோபுரம் இல்லாமல் இருப்பது கண்டு வருத்தம் அடைந்த சபை மக்கள் சிறப்பு மிகு கோபுரத்தை கட்டி நிறைவு செய்தார்கள்.

**விரிவாக்கப்பட்ட தேவாலய பிரதிஷ்டை**

1955 இல் பிரதிஷ்டை செய்யப்பட்ட புதிய தேவாலயம் அச்சம்பட்டி திருச்சபையார் அமர்ந்து ஆராதிக்க போதுமானதாக இல்லாதபடியால் விரிவாக்கம் செய்ய சபையாரும் சேகர கமிட்டியாரும் தீர்மானித்தனர். வடக்கு அச்சம்பட்டியில் பணி செய்த சேகர குருவானவர் ஆமோஸ் ஐயரவர்கள் மற்றும் சேகர தலைவராக அக்காலத்தில் பணி செய்த கனம். இஸ்ரவேல் தனசிங் ஐயரவர்கள் பணி செய்த காலகட்டத்தில் தேவாலயம் விரிவுபடுத்தப்பட்டு விரிவாக்கப்பட்ட தேவாலயம் 06 .10.2012 அன்று நெல்லை பேராயர் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

**சபை வளர்ச்சி**

1994 இல் வடக்கு அச்சம்பட்டிக்கு சபை வரலாறு குறித்து முதன் முதலாக நேரடியாகச் சென்று கள ஆய்வு செய்தபோது 1994 ஆம் ஆண்டு சபை கணக்குப்படி 559 ஞானஸ்நானம் பெற்றவர்களும். 329 நற்கருணைக்காரர்களும் 150 குடும்பங்களும் இருந்தனர். 2023 ஆம் ஆண்டு சபை கணக்குப்படி 1100 ஞானஸ்நானம் பெற்றவர்களும். 600 நற்கருணைக்காரர்களும் 225 குடும்பங்களும் இருக்கின்றனர்.

**தெற்கு அச்சம்பட்டியில் கிறிஸ்தவம்**

தெற்கு அச்சம்பட்டியில் கொண்டையங்கோட்டை மறவர் சமூகத்தினர் சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்பாக கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டார்கள். மேற்கூறையாக ஓடு போட்ட தேவாலயம் கிழ மேலாக கட்டப்பட்டு கிழக்கு நோக்கிய வாசலுடன் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

**புதிய தேவாலய பிரதிஷ்டை**

முதல் தேவாலயம் சிறியதாக இருந்தபடியினாலும் தெற்கு அச்சம்பட்டி சபை மக்கள் அமர்ந்து ஆராதிக்க போதுமானதாக இல்லாதபடியாலும் பெரிதான அளவில் புதிய தேவாலயம் கட்ட சபையார் தீர்மானித்து தென் வடலாக வடக்கு நோக்கி வாசல் கொண்டதாக கான்கிரீட் மேற்கூரை கொண்ட தேவாலயத்தை கட்டினர். சிறப்பாக கட்டப்பட்ட தேவாலயம் 09. 01. 1999 அன்று நெல்லை திருமண்டல துணை தலைவர் அருள்திரு. காந்தி செல்வின் ஐயரவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அந்நேரம் அருள்திரு சாமுவேல் துரைராஜ் ஐயா அவர்கள் சேகர தலைவராக பணியாற்றினார்கள். புதிதாக கட்டப்பட்ட தேவாலயத்திற்கு கோபுரம் கட்டப்பட்டால் சிறப்பாக இருக்கும் என்றெண்ணிய சபை மக்கள் அதற்காக திட்டமிட்டனர். புதிய கோபுரத்திற்கான அடிக்கல் 01.05.2018 அன்று அருள்திரு. சுவாமிநாதன் ஐயரவர்களால் நாட்டப்பட்டது. சுமார் ஏழு மாதங்களுக்குள் 70 அடி உயரமாக கட்டப்பட்ட தேவாலய கோபுரம் 23.12.2018 அன்று தூத்துக்குடி - நாசரேத் திருமண்டல பேராயர் மகாகனம். ஜே. ஏ. டி. ஜெபச்சந்திரன் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. தற்போது பதினைந்து குடும்பத்தினர் இந்த திருச்சபையில் உள்ளனர்.

**அச்சம்பட்டி சேகரத்தில் சமீப கால வளர்ச்சி பணிகள்**

அச்சம்பட்டி சேகரத்தில் சமீப கடந்த நான்கு ஆண்டுகளாக அச்சம்பட்டி சேகர குருவானவர் மற்றும் சேகர தலைவராக அருள்திரு. மேசியாதாஸ் ஐயரவர்கள் சிறப்பாக பணி செய்து வருகிறார்கள். அவர்களது பணிக்காலத்தில் சேகர சபைகளில் அநேக வளர்ச்சி பணிகள் நடைபெற்று வருகின்றன.

சேகரத்தின் தலைமை சபையான வடக்கு அச்சம்பட்டி சபைக்கு அடுத்த பெரிய சபையாகிய தடியாபுரம் திருச்சபையில் புதிய தேவாலயம், புதிய தேவாலய கோபுரம் ஆகியவை சிறப்பாகக் கட்டப்பட்டு 10.06.2022 அன்று நெல்லை பேராயர் மகாகனம். ARGST. பர்னபாஸ் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. தடியாபுரம் கிராமத்தில் T.D.T.A தொடக்கப் பள்ளிக்கான பிரதான கட்டிடம் முழுமையாக அகற்றப்பட்டு புதிய கட்டிட கட்டுமான பணிகள் நடைபெறுகிறது. 60 சதவீத பணிகள் நிறைவுபெற்றுள்ளது. அச்சம்பட்டி சேகரத்தில் தற்போது ஆவுடையாள்புரத்தில் பள்ளி கட்டிடமும் கொக்குகுளத்தில் தேவாலயமும் கட்டப்பட்டுள்ளது.

# சேலம் சங்ககிரி தண்ணீர்பந்தல் பாளையம் இரயில்வே பணிகளின்

# நினைவான கல்லறை



**ஜே. பர்னபாஸ்**

**சேலம் வரலாற்றுச் சங்கம்**



**இடமும் அமைப்பும்**

சேலம் மாவட்டம் சங்ககிரி வட்டம் தண்ணீர் பந்தல் பாளையம் என்ற இடத்தில் இரயில்வே சாலை சந்திப்பில் (Railway Level Crossing) அந்த இரயில்வே பாதையை ஒட்டியே இணையாக செல்லும் பாதையில் இரண்டு பர்லாங் தூரம் பயணித்தால் சாலையோரத்தில் ஒரு கல்லறை கோபுரமும், அதன் வளைவு மாடத்தில் இருக்கும் கற்சிலுவையும் நம் கருத்தைக் கவரும். இது என்ன என்று யாரும் கேட்கும்படி வெட்டவெளியில் நின்றிருக்கும் இந்த நினைவுச் சின்னம் ஏறத்தாழ 20 அடி உயரமான அந்த கால செங்கல் சுண்ணாம்புக் காரை கட்டுமானம். இதன் வளைவு மாடத்திற்குள் ஒரே கல்லில் உருட்டி கடைந்து எடுத்த கற்சிலுவை ஒரு வெள்ளைக் கல் பீடத்தில் பதிக்கப்பட்டிருக்கிறது. இந்த கற்சிலுவையின் மேல் வளைந்தும் நேராகவும் ஆங்கிலத்தில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளது. சங்ககிரி இரயில் நிலையத்திலிருந்து ஈரோடு செல்லும் இருப்புப் பாதை மார்க்கத்தில் தண்ணீர் பந்தல் பாளையம் என்ற இடத்தில் இரயில்வே லெவல் கிராசிங்கை அடுத்து இடதுபுறமாக இரயில்வே பாதையிலிருந்து ஒரு 50 அடி தூரத்தில் காணப்படும் இந்த வரலாற்றுச் சின்னம் சொல்லும் வியப்பான சரித்திரத்தை வாசிக்க உங்களை அழைக்கிறேன்.

**திருமதி. மேட்சர் அம்மையார்**




கி. பி. 1856 முதல் 1861 வரை சேலம் - சங்ககிரி-ஈரோடு-ஒலவக்கோடு வரை செல்லும் இருப்புப் பாதைகளை அமைக்கும் பணிகளை அன்றைய மெட்ராஸ் இரயில்வே கம்பெனி (Madras Railway Company) மேற்கொண்டுவந்த சமயத்தில் இந்த கடுமையான பணிகளில் ஆங்கிலேய அதிகாரிகளும், இந்திய பணியாளர்களும், இரவு பகலாக பாடுபட்டு உழைத்தனர். அப்பொழுது சேலம்-சங்ககிரி பகுதிகளில் நிலவிய கடுமையான வெய்யில் ஆங்கிலேய அதிகாரிகளை வாட்டி வதைத்தது. ஓயாத கடும் உழைப்பில் பாடுபட்ட இந்தியத் தொழிலாளர்களின் நெற்றி வியர்வை இந்த இருப்புப் பாதைகளை எல்லாம் நனைத்தது. இருப்புப் பாதை போடும் பணிகளை முன்நின்று மேற்பார்வை செய்துவந்த இருப்புப் பாதை ஆய்வாளர் திரு. டெயிலர் (Permanent Way Inspec-

tor Mr.Taylor) அவர்கள் இந்தியப் பணியாளர்களை கடுமையாக வேலை வாங்கிக் கொண்டும், மிரட்டிக் கொண்டும் இருப்பார். ஆனால் திரு. டெயிலர் அவர்களின் மாமியாரான திருமதி. மேட்சர் அம்மையார் (Mrs. Matcher) இந்திய பணியாளர்கள் மீது அன்பும், பரிவும், கொண்டு அவர்களுக்கு உணவும், தண்ணீரும் கொடுத்து ஆதரித்து, அன்புடன் பேசி, அவர்களை உற்சாகப்படுத்தி வந்தார். அதனால் இந்திய பணியாளர்கள் தங்கள் வேலைநிமித்தமான கஷ்டங்களை, சோர்வுகளை மறந்து தங்கள் பணிகளை தொடர்ந்து மேற்கொண்டுவந்தனர்.

**திருமதி. மேட்சர் அம்மையாரின் மறைவும், அவரது நினைவிடமும்:**

இருப்புப் பாதை போடும் பணிகள் முடிவடைந்த பிறகும் தொழிலாளர் நலனில் அக்கரையோடும் பரிவோடும் செயல்பட்ட இந்த அம்மையாரை அனைத்து இரயில்வே தொழிலாளர்களும் தங்கள் 'தெய்வம்' என்று கருதி மதித்து வந்தனர். இந்த நிலையில் இந்த அம்மையார் தனது 50 ஆவது வயதில் திடீரென நோய்வாய்ப்பட்டு மரணமடைந்தார். அப்பொழுது அவரது உடலை இரயில்வே பாதை அருகே அடக்கம் செய்து, அங்கே ஒரு மகத்தான நினைவுச் சின்னத்தை அமைத்து தனது நன்றிக்கடனை நிறைவேற்றினார் அவரது மருமகன் திரு. டெயிலர். இரயில்வே பாதையோரத்தில் கெம்பீரமாக நிற்கும் இந்த கல்லறை கோபுரத்தை இரயில்வே பணியாளர்கள் வணங்கி வந்தனர். இந்த பகுதியில் ஒரு கோயிலாக, ஒரு தர்காவாக, ஒரு புனிதரின் கல்லறையாக, இந்த கல்லறை கோபுரம் விளங்கி வந்திருக்கிறது.

**கல்லறை கற்சிலுவை சொல்லும் செய்தி:**

மெட்ராஸ் இரயில்வே கம்பெனி இருப்புப் பாதை அமைக்கும் பணிகளை மேற்பார்வை செய்துவந்த இருப்புப் பாதை ஆய்வாளரான திரு. டெயிலர் அவர்களின் மாமியாரும், பிரிட்டிஷ் இந்திய இராணுவத்தில் பேண்ட் மாஸ்டராக பணியாற்றிய சார்ஜென்ட் மாட்சர் என்பவரின் மனைவியுமான திருமதி. மாட்சர் அம்மையார் கி. பி. 1868 ஆம் ஆண்டில் தனது 50ஆவது வயதில் மரணமடைந்து இங்கே அடக்கம் செய்யப்பட்டார்.

**நமக்கெல்லாம் முன்னோடியாக, முன்மாதிரியாக, திகழும் திரு. A. வயில்:**

42 ஆண்டுகளுக்குப் பின்பு கி. பி. 1910 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் சங்ககிரி பகுதியில் இருப்புப் பாதை ஆய்வாளராக இருந்த திரு. A. வயில் என்பவர் (Mr. A. Vail, - P.W.I.of Sankaridrug) தனது கைச் செலவில் (Pocket Expenses) தனக்கு எந்த விதத்திலுமே சம்மந்தம் இல்லாத அந்நியரான (In Memory of a Stranger ) திருமதி. மாட்சர் அம்மையாரின் கல்லறைக்கு ஒரு அழகான கற்சிலுவையை நிறுவியிருக்கிறார். இது இன்றைய நிலையில், வரலாற்றில் தலைசிறந்த தலைவர்கள், மிஷனெரிமார்கள், சபைத் தலைவர்கள், முன்னோர்கள் ஆகியோரின் கல்லறைகளை எல்லாம் தகர்த்து அகற்றிவிட்டு அந்த இடங்களில் தங்கள் தாய், தகப்பன், உறவினர்கள், இனஜனத்தாருக்கு கல்லறைகளை அமைத்துக் கொள்ளும் போக்கு இன்று நமது திருச்சபைகளில் நிலவுகின்ற காட்சிகளை பார்க்கும்போது, நூற்றிப் பதிமூன்று வருடங்களுக்கு முன்பே தான் வணங்கும்படி முன்மாதிரியாக வாழ்ந்த ஒரு அம்மாவின் கல்லறை எந்த ஒரு குறிப்பும் இல்லாமல் வெற்று நினைவுச் சின்னமாக இருப்பதைக் கண்டு, அந்த அம்மாவின் வரலாற்றைத் தேடி அவரின் கல்லறைக்கு தனது வரலாற்றுச் சேவையாக தகவல்களுடன் கூடிய ஒரு அழகிய கற்சிலுவையை அமைத்துக் கொடுத்து, சேலம் வரலாற்றிற்கு ஒரு மகத்தான உதவியைச் செய்த திரு. A. வயில் போற்றத் தகுந்தவர்.

**கல்லறை சாசனக் கல்வெட்டு :**

ஒரே கல்லில் கடைந்தெடுத்த கற்சிலுவையில் எழுதப்பட்டிருக்கும் வாசகம் இதோ:

Only This Cross was Erected by A. Vail, P. W. I. of Sankaridrug in April 1910 from his pocket expenses.

In Memory of a Stranger named Mrs. Matcher - widow of Band Sgt. Matcher, aged about 50 years died in about 1868 while she lived here with her son -in-law Mr. Taylor, P. W. I. on the Railway Construction

**பின்னுரை :**

'கொங்கு நாட்டின் தலைநகர் சங்ககிரி வரலாறு' என்ற நூலில் இந்த கல்லறை கோபுரத்தைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. கடந்த 19-7-2011 அன்று சங்ககிரி வந்த நியூசிலாந்து பெண்மணி திருமதி. ஜீன் மெண்டிஸ் டீ ரோசாரியோ அவர்கள் இந்த கல்லறையை பார்த்து வியந்தார்கள். அந்த நியூசிலாந்து பெண்மணி சொல்லும் போது: திருமதி. மேட்சர் அம்மையாருக்கு இந்தப் பகுதியில் பல ஏக்கர் நிலங்கள் சொந்தமாக இருந்திருக்கிறது என்றும், அவர் ஒரு செல்வச் சீமாட்டியாக இருந்தார் என்றும் அவர் சொன்னார். சேலம் ஈரோடு இருப்புப் பாதைப் பணிகளின் நிலைத்த அடையாளமாக, சேலம் வரலாற்றின் சான்றாக, திகழும் இந்த வரலாற்றுச் சின்னம் வரலாற்றின் சாட்சியாக பாதுகாக்கப்பட்டு பராமரிக்கப்பட வேண்டும் என்பதே நம் அனைவரின் நோக்கமாக இருப்பதாக.





**Rev. Dr. B**. அகஸ்டஸ் பால் பாண்டியன்
உடையார்குளம்.

# உடையார்குளத்தை
# உருவாக்கித் தந்த உத்தமர்கள்

நாசரேத் என்ற சிறப்புமிக்க பெயரைக் கொண்ட ஊரின் அருகில் விண்ணைத் தொடும் உயர்ந்த கோபுரத்துடன் பிரமாண்டமான ஆலயத்தை நடுநாயகமாக கொண்ட உடையார்குளம் என்ற ஊரில் திருச்சபை எவ்வாறு தோன்றியது. அதை உருவாக்கிய வரலாற்றுப் புருஷர்கள் யார் என்பதை உலகிற்கு அறிவிக்கும் ஓர் சாதனமே இக்கட்டுரை ஆகும்.

அஞ்ஞானம் ஆட்கொண்டப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பக் காலத்தில் உணவுக்கே அடிமைக் கூலியாகச் செயல்பட்டு பிராமணர்களின் அடக்குமுறைக்கு அஞ்சி வாழ்ந்து வந்தனர் உடையார்குள மக்கள். படிப்பறிவோ, நாகரீகமோ, இல்லாத காலத்தில் உரிமைக்கு எங்கு குரல் எழுப்புவது. ஆதிக்க வர்க்கத்தினர் கொடுத்த சொற்ப ஊழியத்தைக் கொண்டு பெருங் குடும்பமாக இருந்த தங்களவர்களின் அரைவயிற்றைக் கழுவிக்கொள்ள சிரமப்பட்டுக் கொண்டிருந்தனர். ஏன் என்று கேள்வி எழுப்ப வேண்டாம். பார்வை கொஞ்சம் மாறிவிட்டாலே சுடும் வெயிலில் குனிய வைத்து பாராங்கல்லை முதுகில் வைத்து விடும். அன்றைய மனித நேயமற்றவர்கள் விழிபிதுங்கி, வழி தெரியாது திகைத்துக் கொண்டிருந்த மக்களுக்கு விடியல் மிஷனரிகள் வழியாக வந்தது.

1850 ஆம் ஆண்டுகளில் நாசரேத்தில் கிறிஸ்தவம் வேரூன்றி வளர்ந்திருந்தது. அங்கிருந்த இஸ்ரவேல் என்கிற வாலிபன் எப்படியோ உடையார்குளத்தைக் குறைந்த வள்ளியம்மை என்கிற 17 வயது பெண்ணை கண்டிருக்கிறார்.

இஸ்ரவேலின் பெற்றோர்கள் அவளைப் பெண் பார்த்து மகனுக்கு முடிவு செய்கின்றனர். ஆனால் பெண் கிறிஸ்தவ சமயத்திற்கு வந்துவிட வேண்டும் என்று கட்டளையும் கொடுத்தனர். அதை ஏற்றுக்கொண்ட பெண்வீட்டார் அவருக்கு ஞானஸ்நானம் கொடுக்கச் சம்மதித்தனர்.

அப்பொழுது அகஸ்டஸ் பிரட்ரிக் கேமரர் என்ற இங்கிலாந்தைச் சேர்ந்த போதகர் நாசரேத்தில் தலைவராக

பணிசெய்து வந்தார்கள். அவர்கள் அப்பெண்ணிற்கு இயேசுகிறிஸ்துவைக் குறித்து அறிவித்து அவளை ஸ்நானஸ்நானத்திற்கு ஆயத்தப்படுத்தினார்கள். வள்ளியம்மையின் பெற்றோரான குமாராண்டி நாடாரும் அவர் மனைவி பேச்சிப்பிள்ளை அம்மாளும் அதற்கு உறுதுணையாக இருந்தனர். 1851 ஆம் ஆண்டு ஜீன் மாதம் எட்டாம் தேதி மூக்குப்பீறி ஆலயத்தில் ஸ்நானஸ்நானம் ஆராதனை நடைபெற்றது. அங்கு வள்ளியம்மைக்கு அன்னம்மை என்று பெயர் கொடுக்கப்பட்டு அவள் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவினாள்.

உடையார்குளத்தின் முதல் கிறிஸ்தவப் பெண் என்று அழைக்கப்பட்ட அன்னம்மை, தொடர்ந்து தனது உறவினர்களுக்கு கிறிஸ்தவ சமயத்தை குறித்துச் சொன்னாள். A. F. கேமரர் ஐயரவர்களும் உடையார்குளம் சென்று அவர்களைச் சந்தித்தார். அங்கு கூடிவந்த மக்களுக்கு இயேசுவை அறிவித்தார். உடையார்குளம் மக்களுக்கு இயேசுவின் அன்பைக் கொடுத்து அவர்கள் வாழ்வில் ஒளியேற்றியப் பெருமை கேமரர் ஐயரவர்களைச் சாரும்.

கேமரரின் தந்தை அகஸ்டஸ் பிரட்ரிக் SPCK மிஷனரியாக 1800களில் தஞ்சாவூரில் பணிசெய்து வந்தார்கள். அவர்கள் மனைவியும் உடன் இருந்து பணி செய்தார்கள். 1804 இல் அவர்கள் நிறைமாத கர்ப்பிணியாக இருந்தபோது மிஷனரி கோலேப் ஐயருடன் நாசரேத் பணிகளைப் பார்வையிட அகஸ்டஸ் பிரட்ரிக் தன் மனைவியுடன் நாசரேத் சென்றிருந்தனர். அச்சமயம் 03.04. 1804 இல் கேமரர் அவர்கள் நாசரேத்தில் பிறந்தார்கள். அயல்நாட்டைச் சேர்ந்த பெற்றோர் என்றாலும் அவர் நாசரேத்தில் பிறந்ததால் நாசரேத்தின் சொந்தகாரர் என்றே கூறலாம். ஏனெனில் அவர் தன் வாழ்நாளில் ஒருமுறை கூட இங்கிலாந்து செல்லவில்லை.

கேமரரின் பெற்றோர்கள் அவரை சென்னையில் படிக்க வைத்தார்கள். தங்களைப் போன்று மகனும் ஊழியம் செய்ய வேண்டும் என்று கருதினர். 08.01.1837 ஆம் ஆண்டு சென்னை ஜார்ஜ் தேவாலயத்தில் பேராயர் கேரி அவர்களால் குருப்பட்டம் பெற்று 1836 ஆம் ஆண்டு முதல் நாசரேத் மிஷனரியாக பணியேற்றார்.

அதனைத் தொடர்ந்து நாசரேத்தின் சுற்று வட்டாரப் பகுதிகளுக்கும் சுற்றித் திரிந்து நற்செய்தி அறிவித்தார். அதில் ஒரு சிறப்பான ஊரே உடையார்குளம் ஆகும்.

கேமரரின் தொடர் வருகையால் உடையார்குளத்தில் அக இருள் நீங்கத் தொடங்கியது. காரணம் கேமரர் அங்கு ஒரு பள்ளிக்கூடத்தை ஏற்படுத்தி நாசரேத்தில் இருந்த மோசே என்பவரை ஆசிரியராக நியமித்தார். சபையின் எண்ணிக்கை பெருகத் தொடங்கியது. எனவே ஏசுவடியான் என்பவரை நியமித்தார். அவர் 12 ஆண்டுகள் உடையார்குளத்தில் தங்கி இருந்து மக்களை கிறிஸ்துவண்டை வழிநடத்தினார். பின்னர் உயர் குருவாக அருட்பொழிவு பெற்று நாசரேத்தில் பணி செய்தார்கள். உடையார்குளம் சபையை கண்காணிக்கும் பொறுப்பையும் அவர்கள் பெற்றார்கள்.

கேமரரிடம் முதல் ஸ்நானஸ்நானம் பெற்ற அன்னம்மையும், அவளது கணவன் இஸ்ரவேலும் உடையார்குளத்தில் வசிக்கத் தொடங்கினர். அவரே சபையின் தலைவராகவும் செயல்பட்டார். எனவே சபை சீரிய வளர்ச்சி பெற்றது. கேமரர் ஐயரவர்களும் 1858 ஆம் ஆண்டு தஞ்சைக்கு மாற்றப்பட்டார்கள். அவரது உன்னதப் பணியால் நாசரேத் வட்டாரத்தில் 17 புதிய சபைகளைத் ஸ்தாபித்தார். அவை இன்றும் அவரது பெயரை உச்சரித்துக் கொண்டிருக்கிறது.

கேமரர் ஐயரவர்களைத் தொடர்ந்து 1809 இல் இங்கிலாந்தில் பிறந்த பிரதர்டன் என்பவர் மிஷனரியில் 1858 ல் நாசரேத்தில் பணியைத் தொடர்ந்தார்கள். அவ்வப்போது உடையார்குளம் சென்று சபையை ஸ்திரப்படுத்தினார். சபைகளை வளப்படுத்துவதற்கு வீட்டு ஜெபக்கூட்ட முறையை அறிமுகப்படுத்தினார். ஆண்களுக்குத் தனியாகவும் பெண்களுக்குத் தனியாகவும் வேதபாட வகுப்புகளை நடத்த உபதேசிமார்களுக்குக்கட்டளைகொடுத்தார். சுவிசேஷப்பணிக்குக் குருக்கள் மட்டுமல்ல, சபை ஊழியர்களும், சபை மக்களும் சேர்த்து செல்ல வேண்டும் என்ற ஒழுங்கை ஏற்படுத்தினார்கள். இவையாவும் ஒழுங்காக நடைபெறுகின்றது என்பதை கேட்டுத் தெரிந்துகொண்டார். உடையார்குளத்தில், இதனை வலுப்படுத்திய காரணத்தால் உடையார்குளத்திற்கு அருகாமையில் உள்ள மளவராயநத்தம் என்ற ஊரில் ஒரு சபையும் கரையடி பச்சேரி என்ற ஊரில் ஒரு சபையும் தோன்றியது. இதில் உடையார்குளம் சபை மக்களின் பங்கு அதிகம் என்பது உண்மையே. இன்றும் அந்த இரண்டு சபைகளும் உடையார்குளம் சேகரத்தில் கிளை சபைகளாகப் பயணித்து வருகிறது. இவற்றிற்கு மூலக் காரணமாக இருந்தவர் அருள்திரு. பிரதர்டன் என்பதை இன்னும் மக்கள் எண்ணி மகிழ்வடைகின்றனர்.

அருள்திரு. பிரதர்டன் அவர்கள் 1869 ல் நாசரேத்தில் மறுமைக்குள் பிரவேசித்தார்கள். அவரைத் தொடர்ந்து அருள்திரு. J. M. ஸ்ட்ரான் என்பவர் 1870 முதல் 1876 வரை நாசரேத்தை தலைமையிடமாகக் கொண்டு பணி செய்தார். இவரும் முன்னவர்கள் பணி செய்ததுபோல நாசரேத் விட்டங்களில் சுற்றுப் பயணம் செய்து சபைகளை வளப்படுத்தினார்கள்.

அருள்திரு. J. M. ஸ்ட்ரான் அவர்கள் 1832 இல் பிறந்தார்கள். இங்கிலாந்தில் மருத்துவத்தில் உயர்கல்வி கற்றவர். 1869 இல் இந்தியா வந்தார். நாசரேத்தை மையமாகக் கொண்டு பணி செய்தார்கள். அப்போது உடையார்குளத்தில் அருமைநாயகம் என்பவர் சபை ஊழியராகப் பணி செய்து வந்தார்கள். உடையார்குளம் மக்கள் ஆன்மீக விழிப்புணர்வு பெற்ற போதிலும், சமூக நிலையில் ஒடுக்கப்பட்ட நிலையிலேயே இருந்தனர். அதற்கு ஓர் காரணம் உடையார்குளம் உயர் ஜாதி மிராசுதார்களிடம் இருந்தது. மக்கள் பிழைப்புக்காக அவர்களை அண்டியே இருந்தனர். இதனால் இந்த மக்களுக்கு நம்மை விட்டால் வழி இல்லை என்ற நிலையில் அதிகமான ஒடுக்குமுறையைக் கொடுத்தனர். அதிலும் புதியதாக கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டும் வந்தனர். தாய் மதத்திற்கு

மாறிவிடும்படி அதிக நெருக்கடிகளைக் கொடுத்தனர். சபை ஊழியரின் முயற்சியாலும் மக்களின் விசுவாச உறுதியாலும் மக்கள் பின்வாங்காது உபத்திரவத்திலே உறுதியாக இருந்தனர். இது சபை ஊழியருக்கு மகிழ்வைக் கொடுத்தது. உடையார்குள மக்களை இந்த மேல் ஆதிக்க மக்களிடமிருந்து விடுவிக்க எண்ணினார். எனவே அருள்திரு. ஸ்ட்ரான் ஐயரவர்களின் உதவியை நாடினார்.

ஐயரவர்கள் மக்களை மீட்பதற்கு ஆயத்தமான மேல் ஜாதி மக்கள் மீது நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தார். இதில் பலகட்ட முயற்சிக்குப்பின் உடையார்குளம் கிராமம் மேல் ஜாதியினரிடமிருந்து விடுவிக்கப்பட்டது. மக்கள் பெற்ற மகிழ்வை சொல்ல வார்த்தைகள் தேவை இல்லை. இவ்விதமாக ஆன்மீக, சமூக, கல்வி பணிகள் மூலம் ஐயரவர்கள் செய்த செயல் வரலாற்றில் இன்றும் பேசப்படுகிறது.

1876 ஆம் ஆண்டு ஐயரவர்கள் சென்னைக்கு மாற்றப்பட்டார்கள். அவருக்குப் பதிலாக இங்கிலாந்தில் பிறந்த மர்காஷிஸ் என்பவர் கால்டுவெல் அவர்களின் பிரசங்கத்தினால் ஈர்க்கப்பட்டு 1875 ஆம் ஆண்டு சென்னை வந்து பின்னர் இடையன்குடியில் கால்டுவெல் அவர்களிடம் ஓராண்டு பயிற்சி பெற்று 1876 ஆம் ஆண்டு நாசரேத்தின் மிஷனரியாகப் பொறுப்பேற்றார்கள்.

1876 ஆம் ஆண்டு முதல் நாசரேத்தின் அருகில் உள்ள பல ஊர்களுக்கு பயணமானார்கள். ஏற்கனவே பணிசெய்த மிஷனரிகளின் செயல்பாடுகளை அறிந்து ஒவ்வொரு சபையையும் சந்தித்து பக்திமார்க்கத்தில் வளர்த்தார்கள். தாம் கற்றறிந்த மருத்துவ கல்வி கொண்டு அநேக மக்களுக்கு மருத்துவ உதவிகள் செய்தார். 1877 ஆம் ஆண்டு தொடங்கி இரண்டு ஆண்டுகள் தென் இந்தியா எங்கும் விஷ காய்ச்சல் பரவியது. அது திண்டுக்கல் காய்ச்சல் என்றும் அழைக்கப்படுகிறது. இதற்கு பல லட்ச மக்கள் மாண்டு போயினர் என்று கூறப்படுகிறது. நாசரேத் பகுதி மக்களும் தப்பவில்லை. அப்பொது மர்காஷிஸ் ஐயரவர்கள் மிகச் சுறுசுறுப்பாகச் செயல்பட்டு அநேக மக்களை சமயபாகுபாடின்றி காப்பாற்றினார்கள். அவரின் உத்தம சேவையை கண்டு பிறசமய மக்கள் பலரும் கூட்டம் கூட்டமாக கிறிஸ்தவத்தில் சேர்ந்தனர். உடையார்குளத்தில் 1877 நவம்பர் முதல் 1880 டிசம்பருக்குள் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு ஞானஸ்நானம் பெற்றவர்களின் எண்ணிக்கை 113 என்று வரலாறு கூறுகிறது. 1882 முதல் உடையார்குளம் சேகர அந்தஸ்து பெற்றது. எனவே அங்கு அருள்திரு. ஆரோன் பிச்சமுத்து என்பவர் குருவாக நியமிக்கப்பட்டார். அவர் உடையார்குளத்தில் தங்கி இருந்து பணி செய்தார்கள். 1883 ஆம் ஆண்டு ஏறக்குறைய கிராமம் முழுவதும் கிறிஸ்தவ சமயத்தை ஏற்றுக்கொண்டது. அப்பொழுது சபையின் மக்கள் தொகை 398 ஆகும். இவர்களில் 290 பேர் ஞானஸ்நானம் பெற்றவர்கள். 108 பேர் ஞானஸ்நான ஆயத்தக்காரர்கள். 39 பேர் நற்கருனைக்காரர் ஆவர்.

இந்த வளர்ச்சியைக் கண்டு மகிழ்வடைந்த மர்காஷிஸ் ஐயரவர்கள் இருந்த ஆலயம் மக்களுக்குப் போதுமானதாக இல்லை என்று அறிந்து ரூபாய் 2000 செலவில் புதிய வலுவான பெரிய ஆலயம் கட்ட தீர்மானம் செய்தார். மக்களின் ஏழ்மை நிலையை அறிந்து ரூ. 1500 ஐ நாசரேத் சபையில் இருந்து வாங்கிக் கொடுத்தார். ஆலயம் கட்டப்பட்டு மக்களின் பயன்பாட்டிற்கு வந்தது.

உடையார்குளம் வரலாற்றில் மிக முக்கியமான ஆண்டுகளான 1851 முதல் 1883 வரையுள்ள 35 ஆண்டுகளைக் கூறலாம். ஏனென்றால் அதற்கு இடைப்பட்ட ஆண்டுகளில் தான் அருள்திரு. A. F. கேமரர் அருள்திரு. தாமஸ் பிரதர்டன், அருள்திரு. J. M. ஸ்ட்ரான் அருள்திரு. மர்காஷிஸ் ஆகியோர் பணி செய்தனர். இவர்களின் உன்னதப் பணியால் அறியாமையில் இருந்த மக்கள் கல்வி மூலம் கடவுளைக் கண்டனர். ஆலயத்தின் மூலம் இறைவனைத் துதித்தனர். மருத்துவ உதவிகள் மூலம் ஆரோக்கியத்தைப் பெற்றனர். சமூகத்தில் அடிமைப்பட்டு போன நிலைமாறி விடுதலைப் பெற்றனர். இன்றும் அநேகருக்கு எடுத்துக்காட்டாக திகழ்கின்றனர். சமூகத்திலும், பொருளாதாரத்திலும் மிகவும் உன்னதமான நிலையைப் பெற்றுள்ளனர். இவ்வாறு உடையார்குளத்தை உருவாக்கித் தந்த உத்தமர்களை இன்று நினைத்து அவர்களது அர்ப்பணிப்பைக் கண்டு, அவர்களைப் பின்பற்றி நாம் நம்மை அர்ப்பணிப்பது அவர்களுக்கு நாம் செய்யும் நன்றியாகும். இன்றும் இந்தியாவிலும் உலகமெங்கும் அறியாமை என்ற இருளில் அடிமை சங்கிலிகளால் கட்டப்பட்ட பெருங்கோடி மக்கள் உள்ளனர். அவர்களது வாழ்க்கையும் உயர்வடைய நம்மால் இயன்றதைச் செய்ய முன்வருவோம். சபையை உருவாக்கும் உத்தமர்களாக மாறுவோம்.



